அண்ணா மாவட்டத்தில் கல்கி!

KALKI 17.8.86 ரூ. 1.50

# கல்கி

## ஹீரோ: குர்னிகால்சிங்



## கொடைக்கானல் ஒரு ரவுண்ட் - அப்

# அபார பலம்.
# 'காம்பிடான்' பலம்.



## அந்த அற்புத உறுதியை உங்கள் வீட்டுக்கு அளிக்கிறது ராம்கோ சிமெண்ட்.

காம்பிடான் மில் மூலம் அற்புத உறுதி ஊட்டப்பட்ட சிமெண்ட் : ராம்கோ.

மிக உறுதியான சிமெண்டை உற்பத்தி செய்ய அதி நவீனமான, மிகச் சிறப்பான கிரைண்டிங் இயந்திரமாகிய ''காம்பிடான் மில்லை''த் தென்னகத்திலேயே முதன் முதலாக அமைத்தது—மதராஸ் சிமெண்ட்ஸ் தான்.

அத்தோடு, அல்லும் பகலும் கச்சாப் பொருள்களையும், தயாரான சிமெண்டையும் இடைவிடாது கடும் பரிசோதனை செய்ய 'எக்ஸ்ரே அனலைசர்' எனும் அதி நவீன உபகரணம்.

ஆகவே, என்றென்றும், அற்புத உறுதி கொண்ட காம்பிடான் சிமெண்ட் உங்களுக்குக் கிடைக்கிறது.

மற்றெவரிடமும் இல்லாத தனிச் சிறப்பான தொழில்நுட்ப மேம்பாட்டால் ராம்கோ சிமெண்ட் அபார பலமும், சிறப்பான இறுகும் சக்தியும் கொண்டதாகத் திகழ்கிறது.

ஆம்! சிக்கனமான செலவில், சிறப்பான பலம்மிக்க கட்டிடங்களை அமைக்க ராம்கோ சிமெண்டையே உபயோகியுங்கள்.

நாணயமான எடை, நம்பிக்கையான தரத்திற்கு நிகரில்லாத பெயர்.






**ராம்கோ சிமெண்ட்**

– அபார பலமும், அற்புத உறுதியும் கொண்ட 'காம்பிடான்' சிமெண்ட்.

தயாரிப்பாளர்கள் :
மதராஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட்
ராமசாமிராஜா நகர் 626 204
(காமராஜர் மாவட்டம்)

சணல், பாலித்தீன், மற்றும் காகிதப் பைகளிலும் கிடைக்கிறது.

CLARION-M.MCL-17A-86-TAM

# இவர்கள் நமக்கு எழுதிய கடிதம்!



அன்புள்ள மாமா அவர்களுக்கு,

வணக்கம் பல சொல்கிறோம். எங்கள் மாவட்ட சமுதாயப் பணி குறித்து மிக்க மகிழ்ச்சி!

திண்டுக்கல் அருகில் உள்ள இரண்டெல்லைப் பாறைதான் எங்கள் ஊர். எங்கள் தெருவில் உள்ள போரிங் குழாய் ரொம்பவும் சுருக்காகப் பழுதுபட்டுக் கொண்டே இருக்கிறது. ரிப்பேர் செய்வார்கள். மறுநாளே பழுது.

நாங்கள் திண்டுக்கல் சென்று படிக்கிறோம். தண்ணீர்க் குழாய் பழுதால் சில நாட்களில் குளிக்காமல்தான் ஸ்கூல் போக வேண்டியிருக்கிறது.

இதோடு எங்கள் கிராமம் மெயின் ரோட்டிலிருந்து ஒரு கி.மீ. தள்ளியிருக்கிறது. ஸ்கூலுக்குப் போக நாங்கள் மெயின் ரோடு வரை நடந்து சென்றுதான் பஸ் ஏற வேண்டும். மெயின் ரோட்டில் ஓடும் டவுன் பஸ்கள் அவ்வப்போது எங்கள் ஊருக்கும் வந்து சென்றால், எங்களைப் போன்றவர்களுக்கு வசதியாய் இருக்கும்.

ஆகவே மாமா, எங்கள் ஊர் போரிங் குழாய் நிரந்தரமாகச் சரி செய்யப்படவும் டவுன் பஸ் வரவும் ஆவன செய்யும்படி பணிவுடன் வேண்டுகிறோம்.

இப்படிக்கு தங்கள் அன்பு மருமகள்கள்,

நேவிஸ் அன்டெனி மெட்டில்டா,
ஆஞ்சலா மேரி



# கொடைக்கானல் ஹீரோ:

# குர்னிகால் சிங்

கொடைக்கானலுக்குச் சென்று, நம்மைப் பத்திரிகையாளர் என்று யாரிடம், அறிமுகப்படுத்திக் கொண்டாலும் முதலில், 'எங்கள் சப்—கலெக்டர் குர்னிகால் சிங் பிரசாதனைவைப் பற்றி எழுதுங்க சார்!' என்றுதான் சொல்லுகிறார்கள். அந்த அளவுக்கு மக்களின் இதயத்தில் இடம் பெற்றுவிட்டார் அந்த இருபத்தேழு வயதுச் சீக்கிய இளைஞர்.

கொடைக்கானலிலுள்ள கூப்புகளில், 'டான் இந்தியா' காண்ட்ராக்டர்களிடம் வேலை செய்யும் நாற்பத்து நான்கு குடும்பங்களைச் சேர்ந்த இலங்கைத் தமிழ் அகதிகள், வெறும் கொத்தடிமைகளாகத்தான் நடத்தப்படுகிறார்கள் என்பதை, முதன் முதலில் பத்திரிகையாளர்கள்தான் கண்டுபிடித்து எழுதினார்கள். உடனே சப்—கலெக்டர் குர்னிகால் சிங், மாவட்ட கலெக்டரான மாதவன் நம்பியாரைச் சந்தித்து, 'அந்தக் கொத்தடிமைகளை மீட்க நடவடிக்கை எடுக்கட்டுமா?' என்று கேட்க, அவரும் 'எடுங்கள்!' என்று சொல்லவே, குர்னிகால் சிங்கும் துணிச்சலாக நடவடிக்கை எடுத்துவிட்டார்.

'டான் இந்தியா' காண்ட்ராக்டர்கள் என்ன லேசுப்பட்டவர்களா? கோட்டையிலிருக்கும் அமைச்சர் ஒருவருக்கே மிகவும் வேண்டப்பட்டவர்கள். அதனால், கோட்டையிலிருந்தே குர்னிகால் சிங்குக்கு மிரட்டல் பறந்தது. ஆனாலும் அவர் மசியவில்லை!

எனவே, அந்தச் சமயத்தில் அலுவலக வேலை தொடர்பான பயிற்சி ஒன்றிற்காகத் திருவனந்தபுரம் சென்று திரும்பிய மாவட்ட கலெக்டர் மாதவன் நம்பியாரைப் பிடித்து 'நெருக்கி'யது கோட்டை! உடனே அலறியடித்துக் கொண்டு, 'கொடைக்கானல் கூப்புகளில் கொத்தடிமைகளா? அப்படியெல்லாம் இடையவே கிடையாது. அது வெறும் தொழிலாளர் பிரச்னைதான். அதைத்தான் இப்படிப் பெரிதுபடுத்திவிட்டார்கள்!" என்று கொஞ்சம் கூடக் கூச்சப்படாமல் ஓர் அறிக்கை வெளியிட்டார் மாதவன் நம்பியார். போதாக் குறைக்குத் தங்களுக்கு எதிரான நடவடிக்கைகளை எடுத்துவிட்டாரே இந்த குர்னிகால் சிங் என்ற ஆத்திரத்தில் குர்னிகால் பற்றித் தரக்குறைவான வாசகங்கள் அடங்கிய போஸ்டர்களைச் சில அரசியல் கட்சிகளின் பெயரில் அச்சடித்து ஒட்டினார்கள் காண்ட்ராக்டர்கள்.

இதற்கிடையில் குர்னிகால் சிங்கைக் கொடைக்கானலிலிருந்து திருவண்ணாமலைக்கு மாற்றியது கோட்டை. நேர்மைக்கு எதிராகச் செயல்பட்ட அரசின் இந்த அநியாயத்தைப் பற்றி எதிர்க்கட்சிகள் கூட அவ்வளவாகக் கண்டு கொள்ளாமலிருந்த போதும் சமுதாயப் பிரக்ஞையும் நேர்மையும் கொண்டவர்கள் சும்மா இருந்துவிட

வில்லை. விஷயத்தை சுவாமி அக்னிவேஷ் மூலமாக சுப்ரீம் கோர்ட்டுக்குக் கொண்டு சென்றார்கள். சுப்ரீம் கோர்ட் குர்னிகால் சிங்கின் மாற்றல் உத்தரவை ரத்துச் செய்து தமிழக அரசைக் கண்டனம் செய்ததோடு, நிலைமையை ஆராய நீதிபதி சி. ஜெ. ஆர். பால், டி. எஸ். சங்கரன் ஐ.ஏ.எஸ்., சமூக சேவகர் மஷ்பூப் பாஷா ஆகிய மூவரையும் கொண்ட கமிஷன் ஒன்றை நியமித்தது.



அமைச்சர்: ''பொது மக்களுக்கு ஒன்று கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன்...! மதுவிலக்கை அமுல்படுத்த வேண்டுமென்றுதான் நினைக்கிறோம்.....! ஆனால் 'திட்டக்குடி', 'தூத்துக்குடி', 'உடன்குடி' என்று ஊரின் பேரிலேயே 'குடி' இருக்கும்போது அமுல்படுத்தினால் அது முழு மதுவிலக்கு ஆகாதே என்றுதான் பார்க்கிறோம்!''

— பக்கிரிசாமி பாரதி

அந்த கமிஷனும் நாற்பத்து நான்கு இலங்கைத் தமிழர் குடும்பங்களும் கொத்தடிமைகளாகத்தான் நடத்தப்பட்டார்கள் என்று உறுதிசெய்து அறிக்கை சமர்ப்பித்தது. அதன் பேரில் அந்தக் குடும்பங்களின் மறுவாழ்வுக்குத் தேவையான நடவடிக்கைகள் உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டுமென்று சுப்ரீம் கோர்ட் உத்தரவிட்டிருக்கிறது.

இத்தனைக்கும் குர்னிகால் சிங்தான் கதாநாயகன்! கோட்டையின் கெடுபிடிகளைக் கூட எதிர்த்து நின்று, இப்படி நேர்மைக்காகப் போராடும் துணிச்சல் இந்த இளைஞருக்கு எப்படி வந்தது? இவருடைய குடும்பப் பின்னணி என்ன?

பஞ்சாபிலுள்ள பாட்டியாலா மாவட்டத்தைச் சேர்ந்த பிர்கோட் என்னும் கிராமம்தான் குர்னிகால் சிங்கின் சொந்தக் கிராமம். சீக்கிய குருமார்களில் ஆறுவதாக வந்த குரு சீக்கியர்களை மிரி (எதிரிகளோடு ஆயுதமேந்திப் போராடுபவர்கள்), பிரி (சாத்விகமான வாழ்க்கை வாழ்பவர்கள்) என்று இரு பிரிவுகளாகப் பிரித்தார். அதில் 'பிரி' என்ற பிரிவைச் சேர்ந்தவர் குர்னிகால் சிங்.

நல்ல வசதியான விவசாயக் குடும்பம். அப்பா ஒரு விபத்தில் அடிபட்டு விட்டதால் வீட்டில் சும்மாதான் இருக்கிறார். அம்மா ஒரு சமூக சேவகி. இரண்டு சகோதரர்கள். அவர்கள் இருவருமே விவசாயம்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். அம்மா சமூக சேவகி என்பதால், தாமே ஒரு முன்னுதாரணமாக ஓர் அனாதைப் பெண்ணைத் தத்தெடுத்துத் தமது சொந்த மகளாகவே வளர்த்து வருகிறார். இவர்களும் அந்தப் பதினான்கு வயதுப் பெண்ணைக் கூடப் பிறந்த சகோதரியை விட மேலாக நேசித்து வருகிறார்கள்.

இவையெல்லாவற்றையும்விட குர்னிகால் சிங்கின் மாமியாருக்கு மிக நெருங்கிய உறவினர்தான் லோங்கோவால் என்பதும், லோங்கோவால் குண்டடிபட்டு இறந்தபோது அவருக்குப் பக்கத்திலிருந்து குண்டடிபட்ட இருவரில் ஒருவர், குர்னிகால் சிங்கின் சித்தப்பா என்பதும்தான் மிகமிக முக்கியமான விஷயம்.

குர்னிகால் சிங்குக்கு நன்றாக விமானம் ஓட்டத் தெரியும். ஒன்றரை வயதில் ஒரு மகள் (குழந்தை படுசுட்டி!) 'தமிழில் சரளமாகப் பேச முடியாவிட்டாலும் துல்லியமாகப் புரிந்து கொள்கிறார்; அச்சு போல் தமிழில் அழகாக எழுதுகிறார்; படிக்கிறார். அதனால்தான் அடித்தள மக்களின் பிரச்னைகளைப் புரிந்து கொண்டு அவரால் நடவடிக்கைகளை எடுக்க முடிகிறது!' என்கிறார்கள் மக்கள்.

இப்படிப்பட்ட குர்னிகால் சிங்கைச் சந்திக்காமல் வந்தால் எப்படி? அதனால் கொடைக்கானலிலுள்ள அவருடைய வீட்டுக்குச் சென்றோம். வீட்டின் முகப்பில் **'Rock Cottage'** என்று எழுதப்பட்டிருந்தது. 'பொருத்தமான பெயர்தான்' என்று நினைத்துக் கொண்டே அவருடைய அறைக்குள் சென்றபோது, ஏராளமான கடிதக் குவியல்களுக்கு மத்தியில் உட்கார்ந்து கொண்டு, ஒரு கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தார்.

எங்களை அறிமுகப்படுத்திக் கொண்டபோது, ''ஸாரி!'' என்றார். அரசு உத்தரவு காரணமாக, அவர் பத்திரிகையாளர்களுக்குப் பேட்டி கொடுக்கக்கூடாது என்பதால் பேச மறுத்து விட்டார். அவர் பேசாவிட்டால் என்ன? அவரைப் பற்றி மக்கள் பேசுகிறார்கள். அவர் எடுத்த புரட்சிகர நடவடிக்கைகள் பற்றியும் அவருடைய துணிச்சல் பற்றியும் பாராட்டிப் பாராட்டித் தேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் தினந்தோறும் நூற்றுக்கணக்கான பேர் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். இதுதானே ஒருத்தருக்கு நிஜமான பெருமை!

— **இளங்கோவன்**

மேலட்டையிலுள்ள குர்னிகால் சிங் வண்ணப்படமும், அண்ணா மாவட்டச் செய்திகளுக்கான மற்ற படங்களும் எடுத்தவர்:

ம.ஞ



* கிராமத்துத் தாய்மார்களுக்குக் கிராமத்துச் சூழ்நிலையையே கொடுக்கும் கஸ்தூரிபா மருத்துவமனை!

# காந்தி கிராமத்திலும் சில கசமுசாக்கள்!

**கா**ந்தி கிராமம்!

திண்டுக்கல் அருகில் அமைந்துள்ள இதைப் பற்றித் தெரியாதவர்கள் இருக்க முடியாது. காந்தியக் கொள்கைகளை நடைமுறைப்படுத்தி, ஒழுக்கத்தை வளர்க்கும் ஓர் இடம். தொழில் அதிபர் டி.வி. சுந்தரம் அய்யங்காரின் மகள் சௌந்தரம் அம்மாள் அவர்களால் உருவாக்கப்பட்ட காந்தி கிராமத்தில் 'காந்தி கிராம அறக்கட்டளை', 'காந்தி கிராம கிராமப்புற பல்கலைக் கழகம்', 'காந்தி கிராம சுகாதாரம் மற்றும் குடும்ப நல பயிற்சி நிலையம்', 'கஸ்தூரிபா மருத்துவமனை' ஆகியவை இருக்கின்றன. இவற்றில் காந்தி கிராம சுகாதாரம் மற்றும் குடும்ப நல பயிற்சி நிலையத்திலும் கஸ்தூரிபா மருத்துவ மனையிலும்தான் இப்போது சில கசமுசாக்கள் தோன்றியிருக்கின்றன!

கஸ்தூரிபா மருத்துவமனையில் நடப்பது என்ன?

இங்கு பிரசவம், குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் ஆகியவையும், பலநோக்கு மருத்துவ, பெண்கள் சுகாதாரப் பயிற்சி மையமும் இருக்கின்றன. இருநூறு படுக்கைகள் கொண்டது இந்த ஆஸ்பத்திரி. அரசு மான்யத்தில் ஜாம்ஜாமென்று இயங்குகிறது. இங்கிருக்கும் கட்டடங்கள் எல்லாம் பொது மக்கள் பணத்தில் உருவானவைதான்.

குடும்பக்கட்டுப்பாடுசெய்துகொண்டவர்களைக் கவனிக்க நூறு சதவீத அரசு மான்யம்; பிரசவ கால பின்கவனிப்புக்கு நூறு சதவீத அரசு மான்யம்; பெண்கள் பயிற்சி மையத்துக்கு நூறு சதவீத அரசு மான்யம்; பற்றாக்குறையைப் போக்கிடவும், அரசு ஆலோசனை மருத்துவமனையாக இயங்குவதாலும் ஆண்டுக்கு ரூ 70,000 அரசு மான்யம் என்று பல மான்யங்களைப் பெறும் இந்த ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் எண்பத்தாறு ஊழியர்களில் எழுபத்தியொரு பேர் பெண்கள். இவர்களின் நிலை? டாக்டர் சத்யாவும், டாக்டர் கல்யாண சுந்தரமும் நம்மிடம் 'ஓ'வென்று ஒரு குரல் அழாத குறையாக முறையிட்டார்கள்.

"நாங்கள் இங்கு கொத்தடிமைகளாகத்தான் நடத்தப்படுகிறோம் ஸார். எத்தனை


* டாக்டர் சத்யா


* டாக்டர் கல்யாணி சுந்தரம்


* குணசேகரன்


* சதாசிவம்

வருடங்களாக இங்கு பணிபுரிகிறோம்; ஆனால் பணி நிரந்தரம் கிடையாது! எங்களுக்கான பணி விதிமுறைகளும் கிடையாது. சம்பளம் அறக்கட்டளை நிர்ணயிப்பது தான். இந்த ஆஸ்பத்திரி அறக்கட்டளை நிர்வாகத்தில் சேர்க்கப்பட்டதே ஓர் அநியாயம்!

''1976 வரை இந்த மருத்துவமனை சொசைட்டி என்ற அந்தஸ்தில்தான் பதிவு செய்யப்பட்டு இருந்தது. ஆனால் சில 'சக்திகள்' இந்த ஆஸ்பத்திரியை அறக்கட்டளையில் சேர்த்துவிட்டன. சம்பளம், மற்றும் பணி பற்றி எது கேட்டாலும், 'நாங்கள் வைத்ததுதான் சட்டம்; இஷ்டமிருந்தால் இருங்கள், இல்லையானால் வெளியேறுங்கள்!' என்கிறது நிர்வாகம். கடந்த 1.1.83 முதல் அரசு உயர்த்திய கிராக்கிப்படி இன்னமும் எங்களுக்குக் கொடுக்கப்படவில்லை! அரசு உத்தரவுப்படி ஊழியர்களுக்குச் சிறப்புத் தரமும் வழங்கப்படவில்லை.

''எங்கள் வயிற்றில் அடித்துவிட்டு, மான்யப் பணத்திலும், பொதுமக்கள் நன்கொடையிலும் இந்த அறக்கட்டளையினர் விளையாடிக் கொண்டிருக்கின்றனர். சொசைட்டியாக இருந்த இந்த மருத்துவமனையை டிரஸ்ட் நிர்வாகத்தில் சேர்த்ததற்கு இன்னும் அரசு ஒப்புதல்கூட வரவில்லை.

''முழுக்க முழுக்க அரசு மான்யத்திலும், பொது மக்கள் நன்கொடையிலுமாக இயங்கிக் கொண்டிருக்கும் இந்த ஆஸ்பத்திரியில் தனியார் மருத்துவ மனை போல் கட்டணங்களும் வசூலிக்கப்படுகின்றன. மேற்கண்ட எங்கள் கோரிக்கைகளுக்காக சில ஆண்டுகளுக்கு முன்னர் நாற்பத்து நான்கு நாட்கள் வேலை நிறுத்தமும் செய்தோம். ஆனால் அப்படி வேலை நிறுத்தம் செய்தபோதுகூட நோயாளிகளுக்கு எந்த வித பாதகமும் இல்லாத அளவுக்குச் செய்தோம்!

''1981ல் மத்திய அரசு மக்கள் நன்மைக்காக உருவாக்கப்படும் 'தொண்டு நிறுவனங்கள்' அரசு சம்பள விகிதத்தை ஏற்றுக் கொண்டால் ஏற்றுக் கொள்ளலாம், இல்லையென்றால் அவர்களே நிர்ணயித்துக் கொள்ளலாம் என்று சொல்லியிருந்தது. இந்த கஸ்தூரிபா ஆஸ்பத்திரி நிர்வாகிகள் பின்னதைப் பிடித்துக் கொண்டு, 'எங்கள் இஷ்டப் படிதான் தருவோம்!' என்று சொல்கின்றனர். உண்மையிலேயே கஷ்டப்படும் தொண்டு நிறுவனங்கள் பல இருக்கும் என்ற நோக்கத்தில்தான் இது போன்றதோர் உத்தரவை மத்திய அரசு போட்டிருக்கும். ஆனால் கஸ்தூரிபா மருத்துவமனை அப்படியில்லையே!

''நிர்வாகத்திலும் ஏகப்பட்ட ஊழல்கள். ஸ்பெஷல் ஆடிட் பார்ட்டியொன்று குடும்ப நல இயக்குனர் அலுவலகத்திலிருந்து வந்து தணிக்கை செய்து பல குற்றச்சாட்டுக்களைக் கூறியிருக்கிறது. இந்தத் தணிக்கைக்குப் பதிலளிக்கும்போது, நிர்வாகம் 'சொசைட்டியை டிரஸ்டாக மாற்றியதற்கு அரசு ஒப்புதல் கிடைக்கவில்லை' என்று மறைமுகமாகச் சொல்லியிருக்கிறது.

''அரசு மான்யத்திலும், பொது மக்கள் நன்கொடையிலும் வளரும் இந்த மருத்துவமனையில் 'டிரஸ்ட்' என்று அமைத்துக் கொண்டு ஒரு சிலர், 'அனுபவிப்பதும்', ஊழியர்கள் மட்டும் சரியான சம்பளம், பஞ்சப்படி, வாங்காமலும் பணி விதிகள் வேலை நிரந்தரம் என்று எதுவுமே இல்லாமல் அவதிப்படுவதும் எந்த விதத்தில் நியாயம் ஸார்? இப்போது தொழிலாளர் கோர்ட்டில் எங்கள் வழக்கு நடக்கிறது. ஆனால் சீக்கிரம் வழக்கு நடத்தாமல் இழுத்தடிக்கின்றனர்'' என்று கஸ்தூரிபா ஊழியர்கள் குறைகளைக் கொட்ட, காந்தி கிராம சுகாதாரம், மற்றும் குடும்ப நலப் பயிற்சி மையத்தின் ஊழியர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை அறிய அவர்களைச் சந்தித்தோம். அங்கும் இதே போன்ற நிலைதான்!

ஊழியர்கள் சங்கத்தின் தலைவர் சதாசிவமும் செயலாளர் குணசேகரனும் நம்மைச் சந்தித்தபோது, ''இது ஒரு சிறப்பு வாய்ந்த நிறுவனம். அனைத்து மாநிலங்களிலிருந்தும் வரும் மருத்துவம் மற்றும் சுகாதார ஊழியர்களுக்கு இங்கு பயிற்சி அளிக்கப்படுகிறது. மேலும் மத்திய, மாநில அரசின் ஆணைப்படி சுகாதாரம் மற்றும் குடும்ப நலத்துறையில் சிறப்பான முறையில் ஆராய்ச்சி செய்து, அரசின் பல முற்போக்குத் திட்டங்களுக்கு உறுதுணையாக இருந்திருக்கிறது. இங்கு நூற்றுக்கு மேற்பட்டவர்கள் பணிபுரிகிறார்கள். இங்கும் எங்களுக்குப் பணி விதிமுறைகள் கிடையாது; வேலைப் பாதுகாப்பு கிடையாது; தேவைக்கு மிகக் குறைவான ஊழியர்கள்;

ஊழியர்களை பிரித்தாளும் சூழ்ச்சி!

''இதற்கெல்லாம் எதிர்ப்புத் தெரிவித்து, பதினைந்து நாட்கள் தொடர் உண்ணாவிரதம் இருந்தோம். ஆனால் பயனில்லை. இதேபோல் நடந்து வரும் பல பயிற்சி நிலையங்கள் அரசால்தான் ஏற்று நடத்தப்படுகின்றன. எங்கள் நிலையத்தையும் அரசே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதுதான் எங்கள் ஒரே கோரிக்கை. அது நடந்துவிட்டால் எங்கள் பிரச்னைகளுக்கு விடிவு காலம் வந்து விடும்!'' என்றார்கள்.

இந்த நிலையத்தின் சேர்மனாக இருந்தவர் காந்தி கிராமத்தை நிறுவிய சௌந்தரம் அம்மாள்தான். சென்ற வருடம் இவர் மறைந்ததற்குப் பிறகுதான் நிலைமை மிகவும் மோசமானது என்கிறார்கள் ஊழியர்கள்.

சரி, இதற்கெல்லாம் காந்தி கிராம அறக் கட்டளையினர் என்ன பதில் சொல்கிறார்கள் என்பதை அறிய மானேஜிங் டிரஸ்டியான பத்மநாபனைச் சந்தித்தோம். ''புகைப்படம் எடுக்க வேண்டாமே!'' என்று சொல்லி விட்டு ஆரம்பித்தார்.

''இது ஒரு தொண்டு நிறுவனம் ஸார். நிறையச் சம்பளம் கொடுத்தால் ஏழைகளுக்கு எப்படிச் சேவை செய்ய முடியும்? ஏழைகளுக்குத் தொண்டு செய்வதற்காக இங்கு வருபவர்கள் சம்பளத்தைப் பற்றியெல்லாம் கவலைப்படக்கூடாது. பாருங்க! எனக்கே நானூறு ரூபாய்தான் சம்பளம். (இவருக்கு சென்னையில், மதுரையில் வீடுகள் இருப்பதாக ஊழியர்கள் சொன்னதை நாம் நம்பவில்லை!) இங்குள்ள அதிகபட்ச சம்பளம் எழுநூறு ரூபாய்தான். குறைந்தபட்சம் முந்நூறு ரூபாய்!''

''ஆஸ்பத்திரியை டிரஸ்டாக மாற்றியது தவறு என்று ஊழியர்கள் சொல்கிறார்களே?''

''அவர்கள் சொல்வார்கள்! நாங்கள் மான்யத் தொகை போதாமல் எங்கெங்கோ 'பிச்சை' எடுத்து இந்த நிறுவனங்களையெல்லாம் நடத்திக் கொண்டிருக்கிறோம். அறக்கட்டளையால் நன்கொடைகள் பெறுவதில் சில சிரமங்கள் குறைவு!''

''டிரஸ்டாக மாற்றியதை அரசு அங்கீகரிக்கவில்லை போலிருக்கிறதே?''

''அரசு சில சந்தேகங்களைக் கேட்டிருக்கிறது. விளக்கங்கள் கொடுத்திருக்கிறோம். அதில் ஒன்றும் பிரச்னை இல்லை.''

''உங்களுக்குத் துணை ஜனாதிபதி வெங்கட்ராமன் போன்றவர்களின் தொடர்பு இருப்பதால் உங்களை எதுவும் கேட்க முடியவில்லை என்று ஊழியர்கள் சொல்கிறார்களே!''

''இங்கு எல்லாமே திறந்த புத்தகம். எங்கள் நிறுவனர் சௌந்தரம், எங்களுக்கு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கட்டளையிட்டுச்சென்றாரோ, அதன்படிதான் நடந்து கொண்டிருக்கிறோம். 'தொண்டு, தொண்டு, தொண்டு.... இதுதான் எங்கள் மூச்சும், பேச்சும்!'' என்றார் பத்மநாபன்.

என்னதான் தொண்டு நிறுவனத்தில் வேலை செய்தாலும், குறைந்தபட்ச வாழ்க்கைத் தேவையைப் பூர்த்தி செய்யும் அளவுக்காவது ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டாமா? விலைவாசிகள் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போவது அனைவருக்கும் தெரிந்ததுதானே? மற்றும், பணி விதிகள், நிரந்தரமாக்குதல் போன்ற விஷயங்கள்;இதற்கெல்லாம் எப்படித் தீர்வு?

ஊழியர்கள் மத்தியில் மனக் கசப்பு அதிகமாகிக் கொண்டே வருகிறது. இது விஸ்வரூபம் எடுக்கும் கட்டத்தில் காந்தி கிராமம் ஏற்கெனவே எடுத்திருக்கும் நல்ல பெயர் காற்றில் பறந்து போகக் கூடும். அதற்கு முன் விழித்துக் கொள்ளுமா நிர்வாகம்?

— நமது நிருபர்

## அடுத்த இதழ்... அண்ணா மாவட்டத்தில் கல்கி II



பழனி முருகனிடமும் பாலிடிக்ஸ் பண்ணுகிறார்கள்!

— பரபரப்பூட்டும் செய்திகள்

* பெண்ணாகப் பிறந்து விட்டால்...

— நெஞ்சை உருக்கும் ஒரு தாயின் கதை!

* போகர் ஆவியுடன் பேசிய நிருபர்கள்!

— சுவாரஸ்யமான செய்திகள்

''என்னிடம் இருப்பது நிதானமே தவிர, தேக்கம் அல்ல!''

— அண்ணா மாவட்ட கலெக்டர் பேட்டி



# ∴பாரெக்ஸ்® முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ∴பாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக் கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கிய தாகும் ∴பாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கிய மாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-∴பாஸ்∴பரஸ் அடங்கியதாகும் ∴பாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ∴பாரெக்ஸ் கலப் பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புதிய மேம்பட்ட ∴பாரெக்ஸ்®

உங்கள்
குடும்பத்தின்
திட்டமிட்ட பரிபூரண உணவு
இப்போது
ஃபேமிலி பேக்கிலே

# சாக்கலேட் சுவை காம்ப்ளான் இப்போது 1 கிலோ பேக்கிலே!

இரண்டு 500 கிராம் பேக்குக்குப் பதிலாக வாங்குங்கள் புதிய 1 கிலோ காம்ப்ளான் பேக், 4 ரூபாய் மிச்சமாக்கிடுங்கள்.

காம்ப்ளான் ஒன்றுதான் உங்கள் குடும்பத்தின் ஒவவொருவருககும அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களைக் கொண்டுள்ளது—கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், தாதுக்கள் மற்றும் மிகச் சிறந்த புரதமான பால்புரதம் (20%)

உங்கள் குடும்பத்ினருக்கு அன்றாடம் அளியுங்கள் இருவேளை காம்ப்ளான்.

ரூ. 4
மிச்சமாக்குங்கள்






**காம்ப்ளான்** —திட்டமிட்ட பரிபூரண உணவு

ULKA-GL-K-85 TAM

# “தொழிற்சாலை வந்தது; தொழிலே கெட்டது!”

“கொட்டப்பட்டி கத்திரிக்காய் என்றால் படு விசேஷம்! மார்க்கெட்டில் கண்ணிமைக்கும் நேரத்தில் விற்றுப் போகும்; அப்படியொரு டேஸ்ட் எங்களூர்க் கத்திரிக்காய்க்கு — பத்து வருஷங்களுக்கு முன்பு! இன்றோ? அத்தனை பெருமைகளையும் இழந்து, அடிவயிற்றைப் பிசையும் நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டோம். குடி தண்ணீருக்குக்கூடப் பக்கத்திலிருக்கும் திண்டுக்கல்லைத்தான் நம்பியிருக்கிறோம்!

"என்ன காரணம்? எங்களூரில் குளங்கள் இல்லையா? ஐயங்குளம், ஆலங்குளம், மூங்கில் குளம் என்று எத்தனை குளங்கள்! கிணறுகள் இல்லையா? ஏகப்பட்ட கிணறுகள். அவற்றில் தண்ணீர் இல்லையா? நிறைய இருக்கிறது. பொன் விளையும் மண்ணும் இருக்கிறது. பின் ஏன் இந்தக் கொடுமை?

"திண்டுக்கல்நகரைச் சுற்றி அமைக்கப்பட்டுள்ள சுமார் நூற்றுக்கும் மேற்பட்ட தோல் பதனிடும் தொழிற்சாலைகள் வந்தன. அவ்வளவுதான்! அந்தத் தொழிற்சாலைகளின் கழிவு நீர் எங்களூர்க் குளங்களில் தேங்குவதாலும், மண்ணுக்குள் இறங்குவதாலும், குளத்து நீர் மட்டுமல்லாமல், நிலத்தடி நீரும் கெட்டுப் போய்விட்டது. வாயில் வைக்க முடியவில்லை. இதோ எங்கள் கிணற்று நீர்; குடித்துப் பாருங்களேன்.....!

"எப்படி இருக்கிறது? அஷ்ட கோணலாக முகத்தைச் சுளிக்கிறீர்களல்லவா? இதுதான் சார் இங்குள்ள தண்ணீரின் லட்சணம்! எங்களூரில் மட்டுமல்ல; சுற்றியுள்ள புதுப்பட்டி, பொன்னுமாந்துறை, முத்தழகுப்பட்டி, ஐயம்பட்டி, காமாட்சிபுரம்.... என்று பல கிராமங்களின் கதியும் இதுதான்! எல்லாக் கிராமங்களிலுமாகச் சேர்ந்து சுமார் நாலாயிரம் ஏக்கருக்கு மேல் பாதிக்கப்பட்டதால், அவற்றை நம்பியிருக்கும் சுமார் ஐயாயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் இன்று நடுத்தெருவுக்கு வந்துவிட்டோம்!

"இதோ பாருங்கள், என் வயலில் நான் போட்டிருக்கும் பருத்திச் செடிகளை. தோல் பதனிடும் தொழிற்சாலைக் கழிவு நீரால் பாதிக்கப்படாத காலத்தில் இதே பருத்திச் செடிகள் ஆளுயரத்திற்கு வளர்ந்து கொப்பும் கிளையுமாகப் பூத்துக் காய்த்து ஒவ்வொரு செடியும் சின்னச் சின்ன மரத்தைப் போல் காட்சியளிக்கும். இப்போது பாருங்கள், ஒரு சாண் உயரம் கூட வளரவில்லை. இதுதான் பசுமைப் புரட்சி



*'' நோயாளிகளாய் வளரும் பருத்திச் செடிகள்...



செய்யும் லட்சணமா? கேட்கிறேன்.

"தொழிற்சாலைகள் உருவாகும்போது ஒவ்வொரு தொழிற்சாலையிலும் நூற்றுக் கணக்கானவர்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கிறது என்பது வாஸ்தவமான பேச்சுத்தான். ஆனால் அவற்றிலிருந்து வெளியேறும் கழிவுப் பொருள்களின் நச்சுத் தன்மையால் எங்களைப் போல் பல நூற்றுக் கணக்கானவர்கள் நடுத் தெரு நாராயணர்களாகிறோமே! ஒரு தொழிற்சாலைக்கு அனுமதி கொடுக்கிற அரசு, அந்தத் தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் கழிவுப் பொருள்களிலுள்ள நச்சுத் தன்மையைப் போக்க அந்தத் தொழிற்சாலை என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டாமா? கவனிக்கவில்லையே சார்!

"அதனால்தான் எங்களைப் போல் பாதிக்கப்பட்ட விவசாயிகளெல்லாம் ஒன்று சேர்ந்து, 'பாதிக்கப்பட்ட மக்கள் இயக்கம்' என்று ஓர் இயக்கத்தைத் தொடங்கியிருக்கிறோம். அரசாங்கத்தின் இந்த அநீதியை எதிர்த்து விரைவில் கேஸ் போடப் போகிறோம்!" என்று ஆவேசமாக முறையிடுகிறார் பாதிக்கப்பட்டவர்களில்ஒருவரும்கொட்டப்பட்டி கிராம நாட்டாண்மைக்காரருமான முத்து வீராசாமி. வேறு வழி?

— பிரின்ஸ்

# தமிழக அரசுக்கு ஒரு சபாஷ்!



திண்டுக்கல் வாசிகளால் மறக்க முடியாத ஆண்டு 1984. அந்த ஆண்டில்தான் கடுமையான குடிநீர் பஞ்சத்தினால் மக்கள் அவதிப்பட்டனர். நகருக்குத் தண்ணீர் சப்ளை செய்யும் காமராஜர் சாகர் வறண்டு போய்விட ரயில் வாகன்களிலும் லாரிகளிலுமாக வைகையில் இருந்து தண்ணீர் கொண்டு வரப்பட்டது. இப்போது திண்டுக்கல் நகருக்குக் குடிநீர் வழங்கிக் கொண்டிருக்கும் காமராஜர் சாகர், 1984ல் திண்டுக்கல்லின் மக்கள் தொகை ஐம்பதாயிரமாகத்தான் இருக்கும் என்று திட்டமிட்டுக் கட்டப்பட்டது. ஆனால் யாரும் எதிர்பாராத வகையில் மக்கள் தொகை ஒன்றரை லட்சமாக உயர்ந்துவிட்டால் எப்படி பஞ்சம் வராமல் போகும்? திண்டுக்கல் தண்ணீர் பஞ்சத்தை நிரந்தரமாகப் போக்குவதற்கு என்னதான் வழி?

ரொம்ப வருடங்களாகவே யோசிக்கப்பட்டு வந்த பேரணைத் திட்டத்தைச் செயல்படுத்துவது என்ற எண்ணத்தோடு வேலை ஆரம்பிக்கப்பட்டது. 2016ல் திண்டுக்கல் மக்கள் தொகை மூன்றரை லட்சமாக இருக்குமாம். ஓர் ஆளுக்குத் தினமும் எழுபது லிட்டர் தண்ணீர் வீதம் மூன்றரை லட்சம் பேருக்கும் சப்ளை செய்தால் எவ்வளவு தண்ணீர் தேவைப்படுமோ, அந்த அளவுக்குப் பேரணையில் இருந்து தண்ணீர் கொண்டு வரப்படுமாம்!

நிலக்கோட்டையிலிருந்து அணைப்பட்டிக்கு வந்து அங்கிருந்து வைகையாற்று ஓரமாகவே ஆறு கி.மீ. வந்தால் பேரணைத் திட்ட வேலைகள் செயல்படும் வேகத்தைப் பார்க்கலாம். வைகை ஆற்றுக்குள் ஆறு ஆழ் குழாய்க் கிணறுகள் தோண்டப்பட்டுவிட்டன. திட்டமிட்டதற்கு மூன்று மாதங்களுக்கு முன்னரே முடித்துவிட்டதாக அங்குள்ள இன்ஜினியர்கள், காலரைத் தூக்கி விட்டுக் கொண்டு சொன்னார்கள். இனி தண்ணீர்த் தொட்டிகள், குழாய்ப் பதிப்பு வேலைகள்தான். நிதி நிலைமை கைகொடுத்தால் இட்டமிட்டதற்கு (மூன்று வருடம்) முன்பாகவே வேலைமுடிந்துவிடும்என்றார்கள். இவற்றோடு தப்பித் தவறி அடுத்த ஆண்டு திண்டுக்கல்லில் குடிநீர்ப் பஞ்சம் ஏற்படுமானால் அதைச் சமாளிக்கத் தற்காலிகமாகவும் பேரணையிலிருந்து குடிநீரைக் கொண்டு செல்ல முடியும் என்றார்கள். இந்தத் திட்டத்தால் திண்டுக்கல் நகரம் மட்டுமல்ல. தண்ணீர் வரும் வழியில் உள்ள இருபது கிராமங்களும் பயன் பெறுமாம்.

உற்சாகத்துடன் வேலை 'செய்யும் இன்ஜினியர்களுக்கும், தமிழக அரசுக்கும் 'சபாஷ்' சொல்லிவிட்டுக் கிளம்பினோம்.

# இது டூப் அல்ல!

கொஞ்ச காலம் முன்பு வரை பெரிய பெரிய ஹீரோக்கள் ஆபத்தான காட்சிகளில் நடிக்கமாட்டார்கள். டூப் போடுவார்கள். ரிஸ்க் எடுக்க நடிகர்களுக்குப் பயம் — உயிராசை. அதைவிட அவர்களை வைத்துப் படம் எடுப்பவருக்குப் பயம் — பணத்தாசை.

இன்று காலம் மாறிவிட்டது. டிரெண்ட் ஸெட்டர் கமல். இன்று பலரும் ஆபத்துக்குத் துணிந்து நடிக்கிறார்கள்.

சத்யராஜ் முதன்முதலாக இரட்டை வேடத்தில் நடிக்கிறார். பெயரிடப்படாத ஒரு படத்தில். ரோல் நெ. 1: டாக்டர்; நெ. 2. இன்ஸ்பெக்டர்.

வால்பாறையருகே நீரார் அணையை அடைந்து அங்கிருந்து ஜீப்பில் பத்து கி.மீ. மலையுச்சிக்குப் போனார்களாம். அங்கு நதியா முதல் 'ரிஃப்லெக்டர்' பிடிப்பவர் வரை அத்தனை பேரும் ரத்த தானம் செய்தார்களாம்! "தீக்குச்சி அளவுள்ள அட்டை. எப்படி எங்கிருந்து வந்தது என்று தெரியாமல் கவ்வுகிறது. உறிஞ்சுகிறது. அது 'ஜிவ்' வென்று பருத்து உதிர்ந்த பிறகுதான் உறுத்தலே உணர்ந்து, ரத்தம் கசிவதையும் காண்கிறோம். அப்



போதுதான் ரத்த தானம் பண்ணியிருக்கிறோம் என்ற விஷயமே தெரிய வருகிறது" என்றார் சத்யராஜ்.

இங்கேதான் மலையிலிருந்து அவர் உருளும் காட்சியைப் படம் பிடித்தார்கள். டூப் ஒருவரையும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

"நடிக்க வந்தது முதல் மூன்று நாலு வருஷங்கள் நான் சும்மா இதுமாதிரி உருண்டு கொண்டுதானே இருந்தேன். இப்ப மட்டும் என்ன? நானே நடிக்கிறேன்" என்றார் சத்யராஜ். அனுபவம் பேசியது! எல்லாரும் சிரித்தபடி ஒப்புக் கொண்டனர்.

சுதா மலையில் தானே உருள முன்வந்ததற்குக் கூறிய காரணம் வேறு. 'தர்மம்' படப்பிடிப்பின் போது பொள்ளாச்சி அருகே மலைச் சரிவு. "நான் ஊனமுற்ற பெண்; அதனால் டூப் போட்டார்கள் என்று யாரும் பேசிவிடக்கூடாது பாருங்கள்!" என்றார் சுதா. தன்மானம் பேசியது! இதையும் அதே படத்தில் நடிக்கும் சத்யராஜ்தான் கூறினார்.

சங்கிலி முருகனுக்கு இது போன்ற திகில் காட்சிகளில் நடித்த அனுபவம் அதிகமாயிற்றே என்பதால் அவரைக் கேட்டேன். அவர் சொன்னார்: "ஸார்! அனுபவம், தன்மானம் எல்லாம் சரிதான்; ஆனால் உள்ளூர பய உணர்வும் இருக்கும். அதை மறுக்கவே முடியாது!



அதை மறைத்து ஒளித்துக் கொண்டுதான் நடிக்க வேண்டும்!" யதார்த்தம் பேசியது!

உடலே பற்றி எரிவது போல் நடிக்க வேண்டும் என்றால் யாருக்குத்தான் பயமாயிராது? 'இது எங்க பூமி' படத்துக்காக அப்படி நடிக்க நேர்ந்தபோது, முதலில் உடல் முழுவதும் பர்னால் தடவிவிட்டார்களாம். (அரை டஜன் டியூப் மருந்தாவது பிதுக்கியிருப்பார்களா?) கையில் கிளவுஸ்; உடைகளைத் தண்ணீரில் நனைத்து அணிந்தார். பிறகு அதன் மீது பெட்ரோல் ஊற்றி எரியவிட்டனர்.

"இத்தனை முன்னெச்சரிக்கை ஏற்பாடுகள் இருந்தாலும் பயமாகத்தான் இருந்தது" என்று சத்தியம் பேசிய சங்கிலி முருகனுக்கு பக்தி அதிகம். அடிக்கடி கோயில், குளம். சமீபத்தில் திருப்பதியிலிருந்து திருமலைக்குக் குடும்பத்துடன் நடந்தே சென்று அங்கப் பிரதக்ஷணமும் செய்திருக்கிறார்.

ஆபத்தை அடிக்கடி சந்திக்க நேர்வதும் இந்த அதீத பக்திக்குக் காரணமாயிருக்குமோ?

— மன்னை
சௌரிராஜன்

ரயில் விபத்துக்களில் மக்கள் பலி

ரயில்வே நிர்வாகத்தின் மெத்தனம்















# கல்கி

1986 ஆகஸ்டு 17
மலர் 45 இதழ் 3
அக்ஷய ஆவணி 1




# பவனி வருவார் ப. உ. ச.!

சென்னை,' மதுரை, கோவை ஆகிய மாநகராட்சிகளுக்கு இப்போதைக்குத் தேர்தல் நடக்காது என்று ப. உ. ச, அறிவித்து விட்டார். இந்த அறிவிப்புக்கும் சமீபத்தில் நடந்த உள்ளாட்சித் தேர்தல்களில் அ. இ. அ. தி. மு. க. வாங்கிய பலத்த அடிக்கும் ஏதேனும் தொடர்பு இருக்கும் என்று யாராவது நினைத்தால் அவர்கள் ஞான சூனியங்கள்! விஷயம் என்னவென்றால் நமது நகராட்சிச் சட்டங்களில் நல்ல அம்சங்களே இல்லை; அப்படியே இருந்தாலும் போதிய அளவில் இல்லை என்று திடீர் ஞானோதயம் பெற்றிருக்கிறார் ப. உ. ச. எனவே பம்பாய், கல்கத்தா, பாட்னா, லக்னோ என்று பல நகரங்களுக்கும் தமது பிரதிநிதிகளை அனுப்பி அவற்றின் நகராட்சிச் சட்டங்களைத் தருவித்து வைத்துக் கொண்டு அலசப் போகிறார். அவற்றில் உள்ள சிறப்பான, அற்புதமான அம்சங்களை நமது உருப்படியில்லாத மாநகராட்சிச் சட்டங்களுடன் சேர்க்கப் போகிறார்! அப்புறம் பாருங்களேன் ஜெட் வேகத்தில் மாநகராட்சித் தேர்தல்கள் நடக்கும்! டக்கராக நமது மாநகராட்சிகள் செயல்படும். மாநகர மக்களின் குறைகள் இருந்த இடம் தெரியாமல் மாயமாய் மறைந்து போகும்!

அது சரி, தமிழ்நாட்டின் மாநகராட்சிச் சட்டங்களுக்கும் வடநாட்டில் உள்ள மாநகராட்சிச் சட்டங்களுக்கும் அப்படி என்ன பிரமாத வித்தியாசம் இருந்து விடப் போகிறது? பெரும்பாலும் பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் அவர்கள் உருவாக்கித் தந்த சட்டங்கள்தானே என்று யாரும் அசட்டுத்தனமாகக் கேட்டுவிடக் கூடாது. சுதந்திரம் பெற்று நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு நிதானமாக இப்படி ஓர் ஆராய்ச்சியைத் தொடங்குவார் ப.உ.ச.; அவருக்கு ஏமாற்றம் அளிக்கக் கூடாது என்பதற்காகவே ஏதாவது வித்தியாசங்களைப் புகுத்தினாலும் புகுத்தியிருப்பார்கள்! வெள்ளைக்காரனின் கெட்டிக்காரத்தனத்தைக் குறைத்து மதிப்பிடாதீர்கள்!

இதற்கு இத்தனை காலம் காத்திருப்பானேன், முன்னாலேயே இந்த ஆராய்ச்சியை நடத்தியிருக்கக் கூடாதா என்று முட்டாள்தனமாக யாரும் கேட்காதீர்கள்! ப.உ.ச. இந்த அமைச்சரவையில் பதவிக்கு வந்தே கொஞ்ச காலம்தானே ஆகிறது? அதுவும் இந்த ஐடியாவே இப்போதுதானே அவருக்குத் தோன்றியிருக்கிறது! அப்படியிருக்க முன்னாலேயே அவர் எப்படி இதுபற்றிச் சிந்தித்து ஆய்வு நடத்தியிருக்க முடியும்?

இந்த ஆய்வு நடந்து முடிய எவ்வளவு காலம் ஆகும் என்கிறீர்களா? இது என்ன அசட்டுக் கேள்வி? அதை யார்தான் கணிக்க முடியும்? நாலு வருஷமும் ஆகலாம்; நாற்பது ஆண்டுகளும் ஆகலாம். இந்தியாவில் எத்தனை நகரங்கள்! எத்தனை நகராட்சிகள்! அவற்றுக்கு எத்தனை எத்தனை சட்டங்கள்! ப. உ. ச. தமது ஆயுட்காலத்துக்கும் ஆராய்ந்து கொண்டிருக்கலாமே! எனவே நாமும் நமது ஆயுட்காலத்துக்கும் தமிழக மாநகராட்சித் தேர்தல்களுக்காகக் காத்திருக்க நேர்ந்தாலும் நேரலாம். அதற்காக வருந்தப்படுவதா? 'நல்லதுக்குத்தானே இந்தத் தாமதம்' என்று மகிழ அல்லவா வேண்டும்!

இதற்கிடையில் சென்னை, மதுரை, கோவை போன்ற பெரு நகரங்களில் மக்கள் பிரச்னைகள் அதிகரித்து வருகின்றனவே என்று முணுமுணுக்காதீர்கள்! உங்களுக்குத் தெரிந்த அந்த விஷயம் ப. உ., ச. வுக்குத் தெரியாதா என்ன? அதற்காகத்தான் அவர் அதிகாரிகள் புடைசூழச் சென்னை மாநகரில் தெருத் தெருவாகப் பவனி வரப் போகிறார்! அப்படி அவர் பவனி வந்ததுமே தருமமிகு சென்னையின் எல்லாப் பிரச்னைகளும் மாயமாய் மறைந்துவிடும்! வீடுகளில் தண்ணீர் 'தப தப'வென்று கொட்டும்; பாதாளச் சாக்கடைகளில் அடைப்புக்களே ஏற்படாது; சாலை மத்தியில் மாடுகள் படுக்காது; குறுக்கே வெட்டிப் போடப்பட்ட சாலைகளில் வாகனங்கள் 'தடால் தடால்' என்று விழுந்து எழாது; நடைபாதைகள் திறந்தவெளிக் கழிப்பிடங்கள் ஆகாது; குப்பைகள் வீதி ஓரங்களில் குவியாது; சாலை விளக்குகள் எரியாமலிருந்து அந்தகாரம் சூழாது! இப்படி சென்னை நகரமே சொர்க்கபுரியாகும் வரை ப. உ. ச. ஓய மாட்டார்! பவனி வந்து கொண்டே இருப்பார்! இங்கு ஓர் அமராவதியை உருவாக்கிய பிறகு ப. உ. ச. கோவை, மதுரை ஆகிய நகரங்களிலும் பவனி வருவார். அவற்றையும் குபேரப் பட்டணங்களாக்குவார்!

அதுவரை நாற்றத்தைச் சகித்துக் கொண்டு, தண்ணீர் கஷ்டத்தை அனுபவித்துக் கொண்டு, இருட்டில் முட்டிக் கொண்டு, சாலைக் குழிகளில் விழுந்த வாகனங்களை ரிப்பேர் செய்து கொண்டு, இதர பல கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டு, பொறுமையாக இருங்கள். பொறுத்தார் பூமி ஆள்வார்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



* இது ஒரு தேசிய நெடுஞ்சாலையாம்!



* நேருஜி நகர் குப்பை மேடு



* கே.வி. குப்புசாமி

# அண்ணா மாவட்ட ஜீவஸ்!

* கோபால சமுத்திரம்



* டெண்ட் கொட்டகையா? காலேஜா?




* ஆமைபோல்நடக்கும்அகலரயில்பாதைவேலைகள்...

* லக்ஷ்மி நாராயணு



* சண்முக சுந்தரம்



* கோட்டை மேலிருந்து திண்டுக்கல் நகரம்





* பழனி மகிமை பற்றிச் சொல்ல வேண்டுமென்றால் கே.பி. சுந்தராம்பாள் தொண்டையோடு யாராவது இனி பிறந்துதான் வர வேண்டும். போய்ப் பழனியில் இறங்குகிறீர்கள். உடனே, 'மொட்டைக்கோஷ்டியா?' என்று ஒரு கும்பலே சூழ்ந்துவிடும். சரி.... வரும்போது காலில் சுளுக்கு விழுந்து ஒரு மாதிரி நடக்கிறீர்களா? ''என்ன சார்.... கானிமுத்தைப் பார்க்கணுமா?'' என்று குதிரை கனைக்க வண்டிக்காரர் இங்கிதத்துடன் விசாரிக்க ஆரம்பித்துவிடுவார். தமிழ் நாடு, இந்தியா முழுக்க ஆண்மையை சப்ளை செய்ய இங்கு ஒரு தெருவே இருக்கிறது. போனால் 'மன்மத் கல்பா வேண்டுமா சார்' என்று கிசுகிசுத்த குரலில் கேட்பார்கள். கொஞ்சம் இறங்கினால் போதும். ஒரு பக்கம் லேகிய டப்பாவும், இன்னொரு பக்கம் பஞ்சாமிர்த டப்பாவுமாகத்தான் நீங்கள் ஊர் திரும்ப வேண்டும்!

* திண்டுக்கல்லுக்கு வருவோம். திண்டுக்கல் என்றாலே மலைக்கோட்டை உடனடியாக ஞாபகத்துக்கு வரும். 360 வருஷங்களுக்கு முந்தின கோட்டை சில சரித்திரங்களைச் சொல்லியபடி இருக்கிறது. நுழை வாயிலில், இஸ்லாமிய எழுத்து. உள்ளே போனால், கோட்டை உச்சியில் விக்கிரகமில்லாத கோயில். திப்பு சுல்தான் காலத்தில் பக்தர்கள் வேஷத்தில் ஒற்றர்கள் நுழைந்துவிடுகிறார்களென்று கோட்டையிலிருந்த அபிராமி அம்மனையும், இன்னொரு சிலையையும் நகருக்குக்கொண்டுபோக உத்தரவிட்டுவிட்டானாம். கோட்டையில் நுழைந்ததுமே, மேலே வேவு பார்ப்பதற்காக விசேஷமான அறைகள். பதுங்கும் அறைகள். ஓரத்தில் எதையோ பார்த்தபடி துருப்பிடிக்காமலிருக்கும் இரு பீரங்கிகள். இன்னொரு பீரங்கி உடைந்தபடி கிடக்கிறது. கீழே மட்டும் கிடந்திருந்தால் ஒரு குடும்பமே ஒரு வருஷம் இதனால் பேரிச்சம்பழம் சாப்பிட்டிருக்கும். ஒரு குகையும் ஒருபுறம் மூடினபடி கிடக்கின்றது. ஊமைத்துரை, அதுவழியாக ஒரு சமயம் தப்பிச் சென்றானாம். ஹைதர் அலியிலிருந்து பல்வேறு நபர்களின் சரித்திரம் சொல்லும் கோட்டை தற்போது இருப்பது தொல்பொருள் இலாகாவிடம். அபூர்வமாய் சில பேர் வந்து சுற்றிலும் சரித்திரப் பார்வை பார்த்தபடி, அடிக்கிற பலமான காற்றுக்கிடையில் பொரி கடலை கொறிக்கிறார்கள்.

* இந்திரா காலத்திலிருந்தே கரூர்—திண்டுக்கல் அகல ரயில் பாதை திட்டத்தை, 42 கோடி ரூபாய் செலவாகுமென்ற திட்டத்தில் ஆரம்பித்தாலும் ஆரம்பித்தார்கள். இப்போது திட்டச் செலவு 96 கோடியாகுமென்று ஆகியிருக்கிறது. ஆமை வேகத்தில் வேலைகள் நடைபெறுவதைப் பார்த்தால், இதைவிட கூடுதலாக ஆனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. 'நம்ம பேரன் இதிலே போவானா சார்?' என்று கிண்டலாகக் கேட்கிறார்கள் சில திண்டுக்கல்வாசிகள். நாம் என்ன செய்ய முடியும்? கேள்வியை ரயில்வேக்கு அனுப்ப வேண்டியதுதான்.

* திண்டுக்கல் கல்லூரிக் கதைகளே விசித்திரமாய்த்தானிருக்கின்றன. ஜி.டி.என். கலைக் கல்லூரியில் எம்.ஏ. போன்ற உயர் டிகிரியெல்லாம் பல வருஷங்களாகவே கிடையாது. கல்லூரி பிரின்ஸிபால் சண்முக சுந்தரத்திடம் ஏன் இப்படி என்று விசாரிக்கிறோம். 'எம். காம். போன வருஷம்தான் வைச்சிருக்கோம். யார் சார் வர்றாங்க. இது பிசினஸ்மேன் ஊர் சார். யாரும் படிப்பிலே அக்கறை காட்டறதில்லே. இதனாலே எம்.ஏ. வைச்சுக்கலை' என்கிறார். இங்கிருக்கிற பெண்கள் கல்லூரியான முத்தையா பிள்ளை பெண்கள் அரசு கலைக் கல்லூரியில் வகுப்பறைகளில் பாடம் நடக்காமல் மரத்தடிகளில் பாடம் நடக்கிறது. எவ்வளவு காற்றோட்டமான வகுப்பறை?

இதுவாவது பரவாயில்லை. ஒரு கார் ஷெட் மாதிரி இருக்கிற இடத்தைக் கூட்டிக்கொண்டு போய்க் காட்டி, ''பச்சேரி ஸ்ரீ நல்ல தங்காள் இஞ்ஜினியரிங் கல்லூரி' என்கிறார்கள். ஆச்சரியமாகப் போய்விட்டது, உள்ளே போய், பிரின்ஸிபால் லீவில் இருந்ததால், பிரின்ஸிபாலுக்கு பதில் பொறுப்பிலுள்ள ஸ்ரீனிவாசனைப் பார்க்கிறோம். உள்ளே சுற்றிப் பார்க்க அனுமதி தர மறுத்தார். ''நீங்கள்தானே இன்-சார்ஜ்?'' என்கிறோம். மிக நீண்ட வியாக்கியானமாக அவர், 'இன்-சார்ஜு'க்குக் கொடுத்த விளக்கத்திலேயே நமக்குத் தலைசுற்ற ஆரம்பித்து விட்டது. வெளியே வந்து நோட்டீஸ் போர்டைப் பார்த்துக் கொண்டிருந்த மாணவர் ஒருவரிடம், ''இந்த வருஷம் கல்லூரியில் சேர முடியுமா?'' என்று கேட்டோம். ''போன வருஷம் பதினைந்தாயிரத்திலிருந்து இருபதாயிரம் வரை கேட்டாங்க. இப்போ விலை கூடியிருக்கும்'' என்றார். ஒரு இஞ்ஜினியரிங் கல்லூரி துவங்க வேண்டுமென்றால் — பல ஏக்கர் நிலம் இருந்தாக வேண்டுமென்று விதியே இருக்கிற போது — எந்த 'ஸ்பெஷல் பர்மிஷனில்' இப்படியொரு கார் ஷெட் காலேஜ்?

* கார் ஷெட் கல்லூரியைப் பார்த்துவிட்டு — குளத்தூர் ரத்னவேல் சுப்ரமணியம் அறக்கட்டளையில் நடக்கும் இஞ்ஜினியரிங், பாலிடெக்னிக் கல்லூரியைப் பார்த்தால் — வியப்படைய வைக்கிறது. ஏறத்தாழ 150 ஏக்கர் பரப்பில் காலேஜ். விசாலமான இடம். எவ்வளவு இயந்திரங்கள்? ஒரு பேக்டரியையே கொண்டு வந்துவிட்டார்கள். கம்ப்யூட்டர் சைன்ஸுக்கு ஒரு கம்ப்யூட்டர் கூடம். கூடத்தில் ஏ. ஸி. குளிரில் அடக்க ஒடுக்கமான கம்ப்யூட்டர் சாதனங்கள். கல்லூரிக்கான கருவிகள் மட்டும் 60 லட்சம் என்றார்கள். பிரின்ஸிபால் கருப்பண்ணன் படபடவென்று விவரித்தபடி சுற்றிக் காட்டினார். ''இதை விடப் பெரிய அளவில் செய்வேன்'' என்கிறார் டிரஸ்டின் தலைவர் கே. வி.

குப்புசாமி. திண்டுக்கல்லைப் பொறுத்தவரை இம்மாதிரி கல்லூரி ஒரு ஆச்சரியம்.

* சந்தடியாயிருக்கிற ரயில்வே-ஜங்ஷனுக்கு மேல் ஒரு 'மேம்பாலம்' கட்டச் சொல்லி எத்தனையோ வருஷங்களாகக் கூப்பாடு போட்டுக் கொண்டுதானிருக்கிறார்கள்? பாலம் வந்தபடியாயில்லை. ஏன்? மத்திய அரசாங்கம் மொத்தச் செலவில் 50% தர ஒப்புக் கொண்டு விட்டதாம். மாநில அரசு தரத் தயாராக இல்லை. அதனால் பாலத் திட்டம் கிடப்பில். அண்ணன் பெயரில் உள்ள மாவட்டத்திற்கு இப்படியொரு தண்டனையா?

* நகராட்சி எல்லைக்குள்ளேயே இருக்கின்ற கரூர் — குஜிலியம் பாறை ரோட்டில் நேருஜிநகரில் ஐந்து ஏக்கருக்கு நாற்றமெடுத்தபடி விரிந்து கிடக்கும் குப்பை மேடு — (ஸ்டேடியமாக்கலாம்) அரசு ஆஸ்பத்திரியின் பின்னுள்ள கோபால சமுத்திரத்தில் சாக்கடை நீர் வந்து சேர்கின்ற அசிங்கம் — எப்போதும் ஒரே நெரிசலும் இரைச்சலுமாயிருக்கின்ற வங்காள மார்க்கெட் (பழைய பஸ் ஸ்டாண்டிற்கு மாற்றலாம்) இவ்வளவு பெரிய மாவட்டத் தலைநகரில் அவ்வளவாக ஆட்டோக்களே இல்லாத ஒரு துரதிர்ஷ்டம்— இப்படி அண்ணா மாவட்டத் தலைநகரின் முகத்தில் பல கரும்புள்ளிகள். யார் மாற்றப் போகிறார்களோ தெரியவில்லை.

* மலைக்கோட்டை மாரியம்மன் திருவிழா ரொம்ப விசேஷம் இங்கு. மாரியம்மன் ஒவ்வொரு மண்டகப் படியாகப் போக — திண்டுக்கல் கொஞ்சம் கலகலத்துப் போகும் அந்த நாட்களில். இந்தப் பக்கம் ஒரு கிராமம். தாடிக்கொம்பு. இங்கு முத்தாலம்மன் திருவிழா சமயம் ஒரு கோஷ்டியே போய் கோயிலில் உட்கார்ந்து, "விழா நடத்தலாமா?" என்று கேட்கும். பல்லி சப்தித்தால் விழா. இல்லையென்றால் சோகமாய் வீடு திரும்பி விடுவார்கள். பல்லி சப்தமிடாவிட்டால் — ஊர்ப்பையன்கள் சோகத்துடன் — சப்தமிடாத பல்லியைத் தேடிக் கண்டுபிடித்து வெளுப்பது இன்னொரு விசேஷம்.

* தமிழ்நாட்டில் அதிசயமாய் புகையிலை ஆராய்ச்சிமையம் வேடசந்தூரில் இருக்கிறது. போனாலும், 1948 லிருந்தே நடக்கிறது. இப்போது தயாராவது வாய்ப் புகையிலைதான். நாற்பது பேர் வேலை பார்க்கிறார்கள். இரண்டு பேர் விஞ்ஞானிகள். 54 ஏக்கரில் வளமான பண்ணை. "முள்ளங்கியையும் புகையிலையையும் ஊடுபயிராகப் போடலாம்" என்கிறார் விஞ்ஞானியான லக்ஷ்மி நாராயணா.

* யாராவது லொடலொடவென்று வம்பளந்தால் உடனே சொல்வார்கள், "உன் வாயைத் திண்டுக்கல் பூட்டாலேதான் பூட்டணும்" என்று. இப்போது திண்டுக்கல் பூட்டு எப்படியிருக்கின்றது? எத்தனையோ பூட்டுக்கள் நவீனமாய் வந்துவிட்டதில் கொஞ்சம் பின்தங்கிப் போய்விட்டன திண்டுக்கல் பூட்டுக்கள். அண்ணா மாவட்டமில்லையா? அரசாங்கத்திற்கு அக்கறை இருக்காதா? சமீபத்திய மாநாட்டை ஒட்டி 'கத்தி'யைப் பற்றிப் பேசி கத்தி வியாபாரம் பெருக்கிய மாதிரி, அடுத்து "ஆட்சியை எதிர்ப்பவர்கள் வாய்ப்பூட்டுப் போட்டுக் கொள்ள வேண்டும்" என்று விசேஷமான ஆர்டர் போடலாம், சில அமைச்சர்களுக்கே கூட முதல்வர் போடலாம்; அதற்கெல்லாம் நம்பகமாய் அண்ணனின் மாவட்டப் பூட்டையே 'சப்ளை' செய்யலாம். அப்புறமென்ன? எங்கும் அண்ணன் மாவட்டப் பூட்டுத்தான்! எவனும் லேசில் வாயைத் திறக்க முடியுமா? திண்டுக்கல் பூட்டா... கொக்கா?

— சூஜி

# மாதம் ஒரு மாவட்டம்



நினைவுபடுத்துகிறோம்!

கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் எட்டாவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது காமராஜர் மாவட்டம். எனவே, காமராஜர் மாவட்டத்திலுள்ள குறைகளும் அநீதிகளும் முறையீடுகளும் தவிர பெரும் சாதனைகள் பற்றிய கடிதங்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.8.86.

உடனடியாக எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்



பேங்க் ஆஃப் தமிழ்நாடு லிமிடெட் சேர்மன் ஸ்ரீ R.A. நீலகண்டன் அவர்களுக்கும் ஸ்ரீமதி சீதா நீலகண்டன் அவர்களுக்கும் 22.7.86 அன்று திருநெல்வேலி மகராஜ நகர் கல்யாண மண்டபத்தில் ஷஷ்டி அப்த பூர்த்தி வைபவம் மிகச் சிறப்பாக நடந்தேறியது.

# 3 உயிராசை

**சுஜாதா**

கடிதங்கள் யாவும் பழுத்த இலைகள் போல் இருந்தன. அஜாக்கிரதையாகக் கையாண்டால் உதிர்ந்துவிடும் போல் இருந்தன. கறுத்த மசியில் தெளிவாக அடித்தல் திருத்தல் இல்லாமல் பூப்பூவான கன்னட எழுத்தில் நெருக்கமாக எழுதியிருந்த கடிதங்கள்!

''கன்னடம் படிக்க வருமா?''

''படிப்பேன். ஆனால் படித்து முடிப்பதற்குள் விடிந்துவிடும்'' என்றேன்.

ஒவ்வொரு கடிதத்தின் இறுதியிலும் ஸுஷ்மா என்று எழுதியிருப்பதை அடையாளம் கண்டு கொள்ள முடிந்தது.

''இதை நீ படிக்காமல் இருப்பதே நல்லது. இந்தக் கடிதங்கள் என் இலக்கியத்தைப் பற்றி மட்டும் எழுத்தைப் பற்றி மட்டும் பேசவில்லை. இந்தப் பெண் என் எழுத்தையும் அவ்வப்போது வந்த போட்டோக்களையும் வைத்துக் கொண்டு என் மேல் மையலும் மோகதாகமும் கொண்டு ஏறக்குறைய கவிதை ரூபத்தில் எழுதியிருக்கிறாள்.''

நான்: ''பதில் போட்டீர்களா?''

''அந்தத் தப்பை நான் செய்யவில்லை.''

ஒரு கடிதத்தை லேசாக மொழி பெயர்த்தார். ''எனதருமை மஹா ஸ்ரீ: என் உடலெனும் தேவஸ்தானம் ஒரே ஒரு தேவனுக்காகக் காத்திருக்கிறது.

எப்போது வந்து என்னுள் புகுந்து குடியிருக்கப் போகிறாய்?''

''அக்க மகா தேவி போல உங்களூர் ஆண்டாள் போல என்னை ஒரு தேவ வம்சமாகக் கருதித் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட கடிதங்கள் எல்லாமே இந்த ரீதியில்தான் சுஷ்மா எழுதியிருக்கிறாள்.''

''என்ன வயசு ஸார்?''

''தெரியாது!''

''யூ மீன் நீங்கள் அவளை?''

''பார்த்ததே இல்லை; பதிலும் போட்டதில்லை! ஒரு வழிப் பாதையில்தான் கடிதங்கள்.''

''ஆச்சரியம்.''

''என்ன ஆச்சரியம்! சுஷ்மாவைப் பார்க்கிறதை ஒருவிதமான ஆதர்சமாக எதிர்பார்ப்பாக வைத்திருக்கிறேன். என்னிக்காவது ஒரு நாள் பார்க்கத்தான் போறேன்.''

''ஆனால் ஏன் இதுவரை பார்க்க முயற்சி செய்யவில்லை?''

''பயம்.''

''பயமா?''

''ஆம்; ரெண்டு பேருடைய கனவும் கலந்து விடுமே என்று பயம்! என் கனவு மனத்தில் சுஷ்மா என்னும் ஒரு வடிவம் இருக்கிறது. அது நேரில் சுஷ்மாவைப் பார்த்தால் கலந்து போய்விடும்! அதே போல் அவளும் என்னை போட்டோவில் பார்த்திருந்தாலும் என் குரல் என் பேச்சு சாமர்த்தியம், நடை பாவனை எல்லாவற்றையும் பற்றி ஒரு வடிவத்தை மனசில் வைத்திருப்பாள். அதுவும் நிச்சயம் கலைக்கப்படும். ஏன் என்றால் நான் என் எழுத்தில் தெரியும் மனுஷனில்லை! நான் ரொம்ப சுயநலக்காரன்! மற்ற பேர் புத்தகங்களை ஒழுங்காகப் படிக்காமல் மற்ற பேரைப் பற்றிப் பொறுப்பில்லாமல் விமர்சனம் செய்கிறவன். பொறுமையில்லாதவன். பேசத் தெரியாதவன். எனக்கு பைல்ஸ் உபத்திரவம் உண்டு. என் மூச்சு நாற்றமெடுத்த மூச்சு. எழுத்தோடு சம்பந்தமில்லாத குறைகள் எல்லாம் எத்தனையோ எனக்கு உள்ளன. எனவே என்னை நேரில் சந்திப்பவர்கள் எல்லாருக்கும் உன்னைப் போல ஏமாற்றம் ஏற்படும்!

''அதே போல அந்த சுஷ்மாவும் நேரில் சந்தித்தால் என் மனபிம்பத்திலிருந்து கணிசமாக வேறுபடலாம். கறுப்பாக ஒட்டடைக் குச்சி போல் இருக்கலாம். வாய் நிறைய பற்களாக இருக்கலாம். மார்பே இல்லாமல் டென்னிஸ் கோர்ட்டாக இருக்கலாம். பேசும்போது எச்சில் வழியலாம்.''

'சேச்சே' என்றேன். அவர் சொல்வது உண்மையாயிருப்பினும் மரியாதைக்காக 'சேச்சே' சொல்ல வேண்டியதாயிற்று!

''என்னைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய் என்பது பற்றி எனக்கு அக்கறையில்லை. இல்லி பத்திரிகையில் என்னைப் பற்றி அவதூறாக எழுதினாலும் எனக்குக் கவலையில்லை. என் வாழ்வில் மகத்தான சாதனை, இலக்கியம் அல்ல. உயிர் பிழைத்ததுதான்! அந்த விபத்திலிருந்து தப்பித்ததுதான். மற்றதெல்லாம் இரண்டாம்பட்சம்!''

''மொத்தம் மூன்று பெண்கள் என்று சொன்னீர்கள்?''

''சொல்கிறேன்! வேளை வரும்போது சொல்கிறேன். இரண்டாவது பெண் என் வீட்டில் வேலை செய்யக் கிராமத்திலிருந்து வந்தவள். மூன்றுமவள் என் மனைவி. அவர்களைப் பற்றியெல்லாம் பத்திரிகையில் எழுதுவதில்லையென்றால் சொல்கிறேன். எழுதினாலும் என்ன போச்சு? என் மகன் என்னைக் கோபிப்பான். அவமானம் அவமானம் என்பான். அவ்வளவுதானே! என் பரிசுகளைத் திருப்பிக் கேட்டாலும் கேட்கலாம்! அதனால் என்ன போச்சு?

''நான் உயிர் வாழ ஆசைப்பட்டு அந்த

இருட்டில், இடிபாடுகளுக்கிடையில் சிக்கிக் கொண்டு தப்பித்தது மிக முக்கியம். அதற்குக் காரணத்தின் பகுதிகள்தான் இந்தப் பெண்கள் மூவரும்.''

''பசிக்கவில்லையா?''

''இப்பவா?''

''இல்லே. நீங்கள் அடைபட்டிருந்தபோது, உதவிக்காகக் காத்திருந்தபோது.....''

''சொன்னேனே, சாப்பிட எதுவும் கிடைக்காது என்று தெரிந்த உடனே வயிறு செய்தி சொல்லத் துவங்கிவிட்டது. பசி, பசி என்று! என்னத்தைச் சாப்பிடுவது?சுற்றிலும் மணல். நேரம் காலம் எதுவும் தெரியவில்லே. மேலே ஏதோ ஏப்பம் விடுவதுபோல் சப்தம் கேட்கிறதே தவிர, உதவி வருகிறதா, நான் செத்துப் போவதற்குள் உதவி வருமா போன்ற விஷயங்கள் எல்லாம் தெரியவில்லே! யாரோ பாடுகிறாற் போல குரல் கேட்டது!

''என்ன சாப்பிடுவது மணலேயா? கான்க்ரீட் கம்பிகளைக் கடிப்பதா? பக்கமெங்கும் பரவியிருக்கும் புத்தகங்களேயா?

''அப்போதுதான் புத்தகங்கள் ஞாபகம் வந்தது. இரவு பகல் தெரியாத வேளையில் ஒரே ஒரு நம்பிக்கை வெளிச்சமாகக் காசளவுக்கு ஒரு சூரியக் குஞ்சு தெரிந்தது!

''மேலே இடிபாடுகளை விலக்கியதில் ஒரே ஒரு சலுகையாகக் கிடைத்த காசளவு வெளிச்சம்! அந்த வெளிச்சத்தில் சுற்றும் முற்றும் பார்க்க முடிந்ததில் புத்தகங்களை உணர்ந்தேன். மெல்ல கைகளை நீட்டி அருகில் இருக்கும் புத்தகங்களை எடுத்தேன்.



''ஃபேமிலி லா என்று புத்தகம். இந்து லா, கிறிஸ்டியன் லா, பார்ஸி,முஸ்லிம் லா என்று.... எனக்குச் சிரிப்பாக வந்தது. அதனருகே மற்றொரு புத்தகம்.'ஏழு பிறப்பு' என்கிற கவிதைத் தொடர். ஹீரேமட் எழுதிய கவிதைகளின் தொகுப்பு. மூன்றாவது எடிஷன். ஒரு கவிதைத் தொகுப்பு மூன்றாவது எடிஷன் வருவது என்பது ஆச்சரியம் என்று அதற்கு நான் முன்னுரை எழுதியிருந்தது ஞாபகம் வந்தது. கவிதைகளைப் படிக்காமலேயே அங்கொன்றும் இங்கொன்றும் என்று நுனிப்புல் மேய்ந்து முன்னுரை எழுதியது ஞாபகம் வந்தது!

''ஹீரேமட் உடுப்பிக்காரன். ஓட்டல் வைத்து ரொம்ப சம்பாதித்தான். நான் உடுப்பி போயிருந்தபோது என்னை நன்றாகவே கவனித்துக் கொண்டான். ரெண்டு பேரும் அரிசிப் பானம் ஒன்றைச் சாப்பிட்டு, 'குவெம்பு', 'தராசு', 'ராஜரத்னம்' இவர்கள் எல்லாம் மேதைகளல்ல. நானும் ஹீரேமட்டும்தான் மேதை என்பது போல பேசிக் கொண்டோம். ராத்திரியெல்லாம் அவன் கவிதைகளைப் படித்துக் கொண்டிருக்க நான் உடுப்பி போன்ற திவ்ய ஸ்தலத்தில் தேவடியாள் கிடைப்பாளா என்று விசாரித்தேன். பின்னிரவில் எங்கோ அழைத்துப் போய் ஏதோ ஒரு வெளிச்சத்தில் கருணையற்ற ஒரு உழுத முகத்தைக் காட்டினான். ஆனபின் கழிவிரக்கம் என்பது பொங்கிப் பெருக, அதிகாலையில் உடுப்பி கிருஷ்ணனைச் சாளரத்தின் வழியாக அகல் விளக்கு வெளிச்சத்தில் தரிசனம் செய்து நூற்றி அறுபது வரி கவிதை அந்தக் கணத்திலேயே சொன்னேன். ஹீரேமட் படியெடுத்துக் கொண்டான்.

''ஹீரேமட் போட்ட புஸ்தகம் உயர்வான காகிதத்தில் இருந்தது. பிரித்துப் பார்த்ததில் வாசனையாக இருந்தது. முதல்நாள் ராத்திரிக்கு ஹீரேமட்டின் கவிதைத் தொகுப்பின் சில பக்கங்களைச் சாப்பிட்டேன்! முதலில் வாயில் செலுத்தியதுமே குபுக்கென்று வாந்தி வந்தது. தொண்டைக் குழியைத் தாண்டமாட்டேன் என்றது கவிதை. எதுக்களித்துவர, ''என்ன ஸ்ரீநிவாச மூர்த்தி, ஏதாவது நீ சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக் கொள்ள வேண்டாமா, காகிதம் என்பது என்ன? செல்லுலோஸ்தானே! அதில் ஏதாவது சக்தி இருக்குமே?'' நான், பசுமாடுகளும் கழுதைகளும் காகிதம் சாப்பிடுவதைப் பார்த்திருக்கிறேன்! எங்கள் வீட்டில் லட்சுமி என்று ஒரு வத்தல் மாடு இருந்தது. சாணி போடுவதற்கும் வெள்ளிக்கிழமை குளுப்பாட்டி மஞ்சள் இடுவதற்கும் அவ்வப்போது மூத்திரம் பெய்வதற்குமே ஏற்பட்ட மாடு அது. ஹிந்து சண்டே எடிஷன் முழுவதையுமே தின்றுவிட்டது! ஏதோ புக் ரெவ்யூ படிக்க வேண்டும் என்று தேடுகிறேன். லட்சுமி சாப்பிட்டுவிட்டது!

''அது போல் அந்தக் கவிதைத் தொகுப்பின் மூன்று பக்கங்களைக் கஷ்டப்பட்டுச் சாப்பிட்டேன். தண்ணீர் இல்லாமல் நாக்கு வறண்டிருந்தது. இருக்கிற தாகத்தில் சிறு நீரைக் கூட குடித்திருப்பேன்! அதுவும் வரவில்லை. முன்னுரை எழுதும்போது அந்தக் கவிதைகளைச் சாப்பிட வேண்டிய ஒரு விதி வரும் என்று எதிர்பார்த்திருக்க முடியுமா? ஹீரேமட்டின் கவிதை சுவையாகவே இருந்தது என்று சொல்லலாம்! எது எப்படியோ, வயிற்றில் போய் அவல் மாதிரி பரவிப் பசியைத் தற்காலிகத்துக்கு அடைத்துவிட்டது. அந்தவிதத்தில் திருப்தியடைந்து சுற்றிலும் விரவியிருந்த மற்ற புத்தகங்களைப் பார்த்தேன்! அடுத்தது எதைச் சுவைக்கலாம் என்ற உத்தேசத்துடன் மேல்நாட்டுக் காகிதங்கள் உசத்தியாக இருக்கும்போல் இருந்தது. 'டெல்மி ஒய்' என்கிற புத்தகத்தின் காகிதங்கள் கதர் போல் தடியாக இருந்தன. ஒரு பைபிள் வெங்காயச் சருகு போல் பக்கங்கள் கொண்டிருந்தது. இந்தி, கன்னட டிக்ஷனரி..., போலீஸ் மான்யுவல், ஃபேமிலி லா போன்றவை கழுதை கலர் பேப்பரில் இருந்தன. 'ரெண்டரிங் இன் பென் அண்ட் இங்க்' என்கிற புத்தகம் நிச்சயமாகவே சுவையாக, தித்திப்பாகக் கூட இருக்கும் போல் இருந்தது!

''இப்படி யாராவது புத்தகம் அச்சிட்டால் என்ன? நன்றாக இருக்கும். ரூபாய் கொடுத்து வாங்கின புத்தகம் அப்பளம் அல்லது உருளைக்கிழங்கு,மரவள்ளி வறுவல்போல செய்த காகிதத்தில் பக்கங்களை அமைத்துச் சாக்லேட் மையில் அச்சிட்டிருக்க வேண்டும். அட்டை கோன் ஐஸ்கிரீம் மேற்புறம் போல் இருக்க வேண்டும். எல்லாப் பக்கங்களிலும் கொஞ்சம் சர்க்கரை சேர்த்திருக்கப் படித்த உடனே கடித்துச் சாப்பிடக் கூடிய புத்தகம்! நல்ல ஐடியா இல்லை?''

நான் அவரை ஒரு மாதிரியாகப் பார்க்க, ''என்னைப் பார்த்தால் பைத்தியம் போலத்தான் தோன்றுகிறது!''

''சேச்சே!''

''பின் ஏன் அப்படிப் பார்க்கிறாய். நீ நம்பவில்லையா? இப்போது ஒரு காகிதம் கொடு, ருசித்துச் சாப்பிடுகிறேனா இல்லையா பார். இண்டியன் நியூஸ் பிரிண்ட் தவிர எதுவாயிருந்தாலும் சரி.'லேக்கக்' நோட்டுப் புத்தகமாக இருந்தால் உத்தமம்!''

''ரிமார்க்கபிள்!''

''எதற்காகச் சாப்பிட்டேன்? எத்தையாவது தின்று உயிர் வாழத்தான்! இந்த ....மகன்கள் வருகிற வரைக்கும் மூச்சும் உயிரும் பத்திரமாக வைத்திருக்க வேண்டித்தான்!''

''சுஷ்மாதான் உந்து சக்தியா அதற்கு?''

''சுஷ்மா அதில் ஒருத்தி. முக்கியமான மற்றொருத்தி என் மனைவி. சுஷ்மாவின் பல கடிதங்களைப் பார்த்தாய். என் மனைவி எனக்கு எழுதிய ஒரே ஒரு கடிதம் இன்னும் பிரிக்கப்படாமல் இருக்கிறது! இது மற்றொரு எதிர்பார்ப்பு!''

''இவைகளுக்காகக் காகிதத்தைச் சாப்பிட்டுக் காத்திருந்தீர்கள்?''

''காகிதம் மட்டும் இல்லை!''

நான் சற்றே அச்சத்துடன் காத்திருக்க, ''கரப்பாம்பூச்சியையும் சாப்பிட்டேன்!'' என்றார் அவர்.

(தொடரும்)

கோத்ரெஜ் படைத்துள்ள சுகபோகத்தின் சிகரம்: மார்வல் லக்ஷரி சோப்




செழுமையான
க்ரீம்போன்ற நுரை
மற்றும் மனம் மயக்கும் நறுமணம்



விலை (75 கிராம்) : ரூ. 4.50 (தலவரிகள் தனி)

# “சட்ட சபையில் பேசினாலும் நடக்க மாட்டேங்குது”

**—ஓர் எம்.எல்.ஏ. கூறுகிறார்!**



* ஆண்டி அம்பலம்



* மாணிக்கவாசகம்

“மேற்கு நோக்கிச் சிவன் கோவில் இருக்குறது ரொம்ப விசேஷம்ங்க. இங்கே இருக்கிற கோவில்லேயும் சிவன் மேற்கு நோக்கித்தான் இருக்கிறாரு. ஆனா நிலைமைதான் சரியில்லே. வந்து பாருங்களேன்....” என்று சிரத்தையாய்க் கூப்பிட்டவர்கள் நத்தத்தை ஒட்டியுள்ள கோவில்பட்டிக்காரர்கள்.

அவர்கள் அழைப்பின்படியே, கோவிலுக்குப் போனோம். குளத்தை ஒட்டின வளைவில் கொஞ்சம் புராதனமான கோவில். சுந்தர சோழ பாண்டியன் காலத்துக் கோவிலாம். உள்ளே போனோம்.

விசாலமாகத்தானிருக்கிறது கோவில். ஆனால் சரியான பராமரிப்பில்லே. ஓர் இடத்தில் வரிசையாகப் பல அழகான வாகனங்கள், சற்றுச் சிதிலமடைந்த நிலையில் இருந்தன. ஒரு காலத்தில் சுவாமி இதில் வலம் வந்திருக்க வேண்டும்.

உள்ளே கைலாசநாதர்.

பாரம்பரியக் குருக்களான சுந்தரேசக் குருக்கள் மந்திரம் ஓதுவது மாதிரியே படபடவென்று புலம்பினார்: “கோவிலுக்கு நிறையச் சொத்து, நிலபுல தனமெல்லாம் இருக்கு. ஆனா வருமானம்தான் இல்லே” என்று. பிறகு சிவன் மேற்கு நோக்கின கதையைச் சுருக்கமாகச் சொல்கிறார். முதலில் உக்கிரம பாண்டியன்



* நம்மிடம் முறையிடும் மக்கள்

காலத்தில் பிரதிஷ்டை பண்ணுகிறபோது சூரியன் மேற்கில் சாய்ந்துவிட, சூரியன் இருக்கிற திசை நோக்கிச் சிலையைத் திருப்பினார்களாம்.

''வைகாசித்திருவிழா பதினைந்துவருஷங்களுக்கு முன்னாடி ஜேஜேன்னு நடக்கும். இப்போ எதுவும் நடக்கிறதில்லை. அறநிலையத்துறை அமைச்சருக்குக் கூட எழுதிப் போட்டிருக்கோம்'' என்கிறார்கள் ஈடுபாட்டுடன்.

''நீங்க எழுதின முகூர்த்தமாவது கோயில் திருவிழா நடந்து நான் பார்த்துட்டுக் கண்ணை மூடணும்!'' என்று மாணிக்கவாசகம் என்ற பெரியவர் உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னார்.

வெளியே வந்தால் கோவில் முன் சிறு மண்டபம். தேர் அரைகுறையாய் நிற்கிறது. பாதியை விறகெரித்துவிட்டார்களாம். தேரின் மேடையில் ஒருவர் சரியான தூக்கத்தில் இருந்தார். அறநிலையத் துறையும் இது மாதிரிதான் இருக்கப் போகிறதா?


* சுந்தரேச குருக்கள்

நல்லாகுளம். இதே நத்தம் கோவில் பட்டியில் ஊரின் மையத்தில் இருக்கிற குளம். ஒரு காலத்தில் குடிநீராகப் பயன்படுத்திக் கொண்டிருந்த குளம். இப்போது கழிப்பிடமாக மாறிப் போய்விட்டது. தண்ணீர்ப் பிரச்னையைப் பலரும் தவித்துப் போன குரலில் சொல்கிறார்கள். பக்கத்திலேயே இருக்கிற இருபதாயிரம் பேருக்கு மேல் வசிக்கிற நத்தத்திலும் இதே கதி.

''என்ன செய்யலாமென்கிறீர்கள்?'' என்று கேட்டால் நம்பிக்கையுடன் சொல்கிறார்கள்:

''இங்கே இருந்து ஐந்தாறு மைல் தூரத்திலே இருக்கிற கரந்தமலையிலே கன்னிமார் தீர்த்தம்னு ஓர் அருவி வருஷம் முழுக்க வற்றாம ஓடிக்கிட்டிருக்கும். அதைத் திருப்பி இந்த ஊருக்கு 'பைப்' மூலம் கொண்டு வந்தா இவ்வளவு ஜனங்களுக்கும் வழி பிறந்த மாதிரி போகும்ங்க'' என்று!

கரந்தமலையின் 'கன்னிமார் தீர்த்'தத்தைப் பார்க்கப் போனபோது, மலையின் இடையிலேயே எப்போதும் தண்ணீர் சிறு அருவியாய்.... குளிர்ச்சியாய் விழுந்து கொண்டிருக்கிறது. இதையே முறையாகத் திருப்பி விட்டால், எத்தனை வயிறுகள் குளிர்ந்துபோகும்!



நத்தத்திலேயே இருக்கிற இ. காங்கிரஸ் எம்.எல்.ஏ. வான ஆண்டி அம்பலத்தைப் பார்த்தோம். அப்போதுதான் டவுன் பஞ்சாயத்தைச் சேர்ந்த கிருஷ்ணன் சிறு சிறுபாக்கெட்டுகளுடன் வந்துபுகார்சொல்லிக் கொண்டிருந்தார். விசாரித்தோம்.

''இங்கே பாருங்க... இந்தப் பாக்கெட்டை என்னங்க இது. ரேஷன்லே ரவை வாங்கப் போனா இவ்வளவு புழுவாங்க இருக்குறது... அதனாலேதான் எம். எல். ஏ. கிட்டே ரிப்போர்ட் பண்ண வந்திருக்கேன்...''

— ஒருவித நைந்த சிரிப்புடன் அதை வாங்கி ஓரமாக வைத்துக் கொண்டார் எம். எல். ஏ.

தண்ணீர்ப் பிரச்னை பற்றிக் கேட்டோம்.

''இந்தத்தொகுதியிலேநாலாவதுமுறையா எம். எல். ஏ. வாக இருக்கிறவன் நான். சி. சுப்ரமணியம் நிதியமைச்சரா இருந்த காலத்திலேயே கரந்தமலையிலிருந்து தண்ணீர் கொண்டு வர்றதுக்குத் திட்டம் போட்டு சர்வே எல்லாம் எடுத்தாச்சு. அவர் இருக்கிறப்பவே இருபத்திரண்டு லட்சம் செலவிலே திட்டம் தீட்டியாச்சு. இன்னும் தண்ணீர்தான் வரலே. நானும் கரந்தமலையைப் போய்ப் பார்க்கப் போறேன்... நீங்களும் 'கண்டிஷனா' எழுதுங்க சார்.''

நான்கு முறை ஜெயித்த எம். எல். ஏ. வே அலுத்துப் போய்ச் சொல்கிறார். ''சட்டசபையில் பேசவெல்லாம் செஞ்சாச்சு... இன்னும் ஒண்ணும் நடக்கக் காணோம்...''

— பக்கத்தில் வீணாகிப் போய்க் கொண்டிருக்கும் தண்ணீரைத் திருப்பிக் கொண்டு வந்தால் — ஏறத்தாழ முப்பதாயிரத்துக்கும் மேற்பட்ட ஜனங்களுக்கு — எவ்வளவு வசதியாயிருக்கும்? ஜனங்கள் தண்ணீர்ப் பிரச்னைக்குக் கூட மனம் நொந்து போய் ஏதாவது போராட்டம் நடத்தினால்தான் விடிவுகாலம் பிறக்குமா? இல்லையென்றால் அரசாங்கத்தின் காதுகளில் விஷயம் ஏறாதா என்ன?

— யூகி

புதிய மேம்படுத்தப்பட்ட

# கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ்

## சில பெண்களுக்கு இது தேவை.



இது மிக நீளமான நேப்கின் இது மிக அகலமான நேப்கின் இது மிக தடிப்பான நேப்கின்

கூடுதலான பெரிய சைஸிலே தரமுள்ள நேப்கினின் சுகமும் பாதுகாப்பும் தேவைப்படும் பெண்களுக்கு—இதோ ! புதிய கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ்.

நீளத்தினேயும், அகலத்தினேயும், தடிப்புத் தன்மையினேயும் கூடுதலாகவே பெற்றிருக்கும் இந்த நேப்கினின் நாரிழைகள் உறிஞ்சும் திறன் அதிகமாகப் பெற்று மிகுந்த நம்பிக்கையைத் தருகிறது.

ஒண்டர்ராப் உறைகள் ஈரத்தை உள் அடுக்கிற்குள் செலுத்துவதால் ஈரம் சீராக உறிஞ்சப்பட்டு உலர்வினேயும் சுகத்தினேயும் உங்களுக்குத் தருகிறது. நாப்கினின் இந்த சிறப்பான டாப்-நுனிகள் சரியாகப் பொருந்த உதவுவதோடு கச்சிதமாகவும் இருக்கிறது.

இப்போது கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜில் ஒரு சிறப்பான (ஈரம் கசியாத) 3 வழி நீலநிற பிளாஸ்டிக்-ஷீல்டு—அடிப்புறம் அணைப்புக்கொடுத்து பக்கங்களோடு மேற்புறம் வரை பரவியமைகிறது. படத்தில் நீங்கள் காண்பதுபோல. இவ்வகையில் உங்களுக்கு அதிகப் பாதுகாப்பு, அதிக பத்திரத் தன்மை.

புதிய கேர்:ப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ்—முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு.

கூடுதலான பெரிய சைஸில்.

தேர்ந்தெடுத்த நகரங்களில் மட்டுமே கிடைக்கிறது.







OBM/6784/TM

தவிரவும் கிடைப்பவை : கேர்:ப்ரீ ரெகுலர் 10'கள், 20'கள், 30'கள் அடங்கிய பேக்குகள்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

# மேகங்கள் ஜாக்கிரதை!

இராஜாபாலச்சந்தர்





அந்த அலுவலக சகவாசம் சங்கருக்கு அருவருப்பைத் தந்தது.

'த்தூ... மனிதர்களா இவர்கள்? பணத்தாசை பிடித்த பிணங்கள்! தங்களின் மிக மிகச் சாதாரணமான கடமைகளைச் செய்வதற்குக் கூட வாய் கூசாமல் லஞ்சம் கேட்கின்றார்களே?'

— குமுறினான்.

அவர்கள் கேட்கும் தொகையைத் தர இயலாமல், ஏழைகள் படும் அவஸ்தைகளைக் கண்டு அவன் உள்ளம் கொதித்தது.

என்றாலும், இங்கே பணிபுரிய முடிந்ததில் அவனுக்குப் பூரண சந்தோஷம்தான்.

சில நாட்களிலேயே சக ஊழியர்களால் வெறுத்து ஒதுக்கப்பட்டான் சங்கர்.

காரணம், அவன் எதற்காகவும், யாரிடமிருந்தும் லஞ்சம் வாங்குவதே கிடையாது.

அந்தக் குறிக்கோளுடன்தானே இந்த வேலையைத் தேடிப் பிடித்து அமர்ந்தான் அவன்.

எனவே, அந்த அலுவலகத்திற்கு (அரசாங்க) உதவிகளைப் பெற வந்த எளிய பிரிவினர்கள் யாவரும் சங்கரையே தேடி வந்து, ஒரு காசும் செலவின்றி, காரியம் வெற்றியடைந்த சந்தோஷத்தோடு திரும்பினார்கள்.

அவர்களின் மகிழ்ச்சி அவனது மகிழ்ச்சியாக இருந்தது.

''பொழைக்கத் தெரியாத பய. பெரிய்ய இவன்னு நெனப்பு'' என 'வருவாய்' குறைந்த கடுப்பில் சக ஊழியர்களால் வெளியேற்றப்பட்ட வார்த்தைகளை. அலட்சியம் செய்தான் சங்கர்.

இடைவேளை நேரம் முடிந்துவிட்டதால் கேன்டீனிலிருந்து அவசரமாக நடந்தான் சங்கர்.

மதில் சுவருக்கு மறுபுறம் பியூன் வேணுவின் பேச்சுக் குரல் கேட்டது. அதில் தனது பெயர் அடிபடவே நெருங்கி நின்று கேட்டான் சங்கர்.

பியூன் யாரிடமோ கிசுகிசுத்தான். ''என்னய்யா கம்முனு இருக்கே? உன்னோட அவசரம் எனக்குப் புரியுது. நெலமையும் தெரியுது. அதனாலதான் போனா போகுதுன்னு உதவி செய்யறேன். இதே வேலையை மற்றவங்க செய்தா வேணுமுன்னே ஒரு வாரம் இழுத்தடிப்பானுங்க. அதுமட்டுமில்ல, கொறைஞ்சது நூறு ரூபாயாவது புடுங்காம வுட மாட்டானுங்க.

''அப்படியா?''

''ஆமா. ஆனா, அந்தச் சங்கர் சாருகிட்ட இந்த வேலை போனா, இன்னைக்கு சாயந்திரத்துக்குள்ளே முடிச்சுக் குடுத்துடுவாரு. ஒரு பைசாக்கூட வாங்க மாட்டாரு. இப்ப, நீ சொன்னா, உன்னோட ஃபைலை நான் அவரு மேசைமேல் எப்படியாச்சும் வச்சுடுவேன். என்ன சொல்றே?''

''அப்படியே செய்யுங்க.''

''அப்ப எனக்கு இருபது ரூபாய் கொடு.''

அதிர்ந்து போனான் சங்கர்.

**ர**ஹ்மானின் இந்த ரம்ஜான் பண்டிகை வேலூர் ஜெயிலில் கழிந்து கொண்டிருக்கும் வேளையில்தான் அவன் மகன் அப்துல் சலாமை ஜெயில் சென்ட்ரி சிறைக்கு வெளியே தடுத்து நிறுத்தினர்.

சலாம் பதினைந்து வயதுப் பையன். அவன் கையில் ஒரு பெரிய கைக்குட்டையில் மேலே பிடிக்க வசதி விட்டுக் கட்டப்பட்ட ஒரு பாத்திர மூட்டை.

''யார்ரா நீ?''

''கைதி ரஹ்மானின் புள்ளே!''

சலாம் சென்ட்ரியைப் பார்த்தவுடனே ஒரு சலாம் செய்திருந்தான். ஒல்லியான



ஜவயகவன்

பையன். உயரம், சிவப்பு. முகத்தில் பண்டிகை நாளில் தன் தந்தை ஜெயிலில் இருக்கிற வருத்தம். கண்களில் அவரைப் பார்க்க உள்ளே விடுவார்களோ மாட்டார்களோ என்ற மருட்சி. பையனைப் பார்த்தால் ஒரு பயந்த முயல் ஞாபகம் வந்தது.

அதற்காகத்தான் சென்ட்ரி கொஞ்சம் நிதானித்தார்.

''எந்த ரஹ்மான்?''

''அப்துல் ரஹ்மான்.''

''நம்பர் என்னடா?''

''746.''

சென்ட்ரி நினைத்தது சரி. அதே ரஹ்மான். ஒரு சின்னப் பிழையைக் கூடச் சகிக்க முடியாத அதே ரஹ்மான். ஒரு சின்ன அவமரியாதைக்குக் கூடச் சீறி எழுகின்ற அதே ரஹ்மான். பையன் அம்மாவைக் கொண்டிருப்பான் போலிருக்கிறது. மென்மை, நிதானம்.

''கையிலே என்ன மூட்டை?''

''குஷ்கா.''

குஷ்கா — இறைச்சி தவிர்க்கப்பட்ட புலவுச் சோறு.

# குஷ்கா

''எதுக்கு?''

''அப்பாகிட்டே குடுக்கணும்.''

''பர்மிஷன் வாங்கியிருக்கியா?''

சலாம் விழித்தான்.

''ஜெயில் கைதிங்களுக்கு 'பர்மிஷன்' இல்லாமே சாப்பாடெல்லாம் கொண்டு வரக் கூடாது.''

அதிகாரம் எப்படி வேண்டுமானாலும் வளையக் கூடிய வஸ்து. அது வளையும் அல்லது வளையாமல் போகும். ரஹ்மானுக்காக வளைவதற்கு அதற்கு விருப்பமில்லை.

''மட்டன் பிரியாணி இல்லையா?''

சலாம் அந்த சென்ட்ரியை வெறித்துப் பார்த்தான்.

'அப்படி இருந்தால் விட்டுவிடுவாரோ? முஸ்லிம் வீட்டுப் பண்டிகையில் மாமிசம் ஏன் இல்லை என்று கேட்கிறாரோ? இவருக்கு மட்டன் பிரியாணி மீதுள்ள விருப்பத்திற்காகக் கேட்கிறாரோ?'

''என்னடா கேக்கிறேன்?''

அவர் குரல் உயர்ந்ததில் சலாம் மருண்டு விட்டான்.

''இல்லே.''

''பொய் சொல்றே... இது மட்டன் பிரியாணிதானே?''

''இல்லே... நெஜமாலும் இது குஷ்காதான்.''

''ஏன் 'மட்டன்' இல்லே?''

சலாம் பார்வையைத் தாழ்த்திக் கொண்டான். இந்தக் கேள்வியைக் கேட்க வேண்டியது இவர் வேலையல்ல. விடை சொல்ல வேண்டியதும் தன் ஜோலியல்ல. எனினும் மனசு சிறைக்குள்ளும் வீட்டிற்குமாகத் தாவிப் பறந்தது.

இறைச்சி வாங்கித் தர வேண்டியவர் உள்ளே இருக்கிறார். அவர்கள் பேட்டையில் சிலர் ஏழை முஸ்லிம்களுக்காக இலவசமாக இறைச்சி விநியோகம் செய்தார்கள். அக்கம் பக்கத்திலிருந்து பல பேர் ஓடிப் போய் வாங்கி வந்தார்கள். போயிருந்தால் சலாம் தான் போக வேண்டும். அவன் போகவில்லை. சலாமின் அம்மா போகச் சொல்லவுமில்லை.

''எத்தனை ரம்ஜான் சந்தோஷமாகப் போயிருக்கு முன்னு! இந்த ரம்ஜான் கொஞ்சம் கம்மி ஜாஸ்தி. அல்லாஹுத்தாலாவின் இஷ்டம் அப்படி!'' என்றாள்.

சலாம் அம்மாவுக்குப் பதில் பேசுவதேயில்லை. எனவேதான் குஷ்கா. ஒரு மூட்டை கட்டி அவனிடம் கொடுத்துவிட்டுச் சொன்னாள்: ''இதைக் குடுத்துட்டு வந்துடு.''

''என்னை விடுவாங்களாம்மா?''

''விடுவாங்க. நம்பர் சொல்லு 746.''

''விட மாட்டேன்னுட்டா?''

''இது ரம்ஜான் காணு முன்னு. அல்லாஹ் எல்லா மனசுலேயும் இருக்கார். விடுவாங்க.''

சலாம் பயந்து கொண்டே தயங்கிக் கொண்டேதான் வந்தான். அவனுக்கு அது பிடிக்கவில்லை. விஷயம் குஷ்கா எடுத்துக் கொண்டு ரம்ஜான் தினத்தில் தந்தையைக் காணச் செல்வதில் இல்லை. அவரை எங்கே பார்க்கிறோம் என்பதில்தான் இருப்பதாக சலாம் நினைத்தான்.

அவனுக்குத் தெரிந்த எந்த நண்பனும் எந்த உறவினரும் அப்படிப் போய்க் காணவில்லை. அப்படி எவருக்கும் நேர்ந்ததாக அவன் கேள்விப்படவுமில்லை. அவன் அனுபவ வரம்பு குறுகியது. உலகில் எவருக்குமே அது நேர வேண்டாம் என்றுதான் ஈத் பிரார்த்தனைக்காக மசூதிக்குப் போன போது அவன் வேண்டிக் கொண்டான்.

அம்மாவும் கூட வந்திருக்கலாம். அல்லது தம்பிகள், வேறு யாரையாவது கூட அனுப்பியிருக்கலாம். அதற்கு மேல் விஷாரத்திலிருந்து வேலூருக்கு இரண்டு பஸ் சார்ஜ் ஆகிருக்கும். அது வசதிப் படாது.

பையன் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாததை சென்ட்ரி கவனித்தார். அப்பன் முரட்டுத்தனம் இவனுக்கும் இருக்கிறது என்று அவருக்குப் பட்டது.

''ஜெயில் கைதிக்கெல்லாம் வெளியே இருந்து பர்மிஷன் இல்லாமே எதுவும் குடுக்கக் கூடாது... போ... போ...''

சலாம் அவரைத் தீனமாகப் பார்த்தான்.

செண்ட்ரிக்குப் போன வாரம் வெளியூர் சப்ளைக்காக ஜெயிலில் செய்த மேஜை நாற்காலிகளை லாரியில் ஏற்றிய சம்பவம் கவனத்துக்கு வந்தது.

ரஹ்மானும் கூட மாட மேஜைகளைப் பிடித்து லாரியில் ஏற்றிக் கொண்டிருந்தான். லாரிக் கதவு உயரம். கீழே இரண்டு பெஞ்சுகளை நிற்க வைத்துத் தரையிலிருந்து நாலைந்து பேர் தரத் தர, பெஞ்சின் மேல் நிற்பவன் வாங்கி உள்ளே லாரியில் அடுக்குபவர்களுக்குக் கைமாற்ற வேண்டும்.

ரஹ்மான் பெஞ்சின் மேல் நின்றிருந்த இருவரில் ஒருவன். அடுத்தவன் வேகத்திற்கு ரஹ்மானால் வாங்க முடியவில்லை. செண்ட்ரி தான் மேற்பார்வை.

''சரியா வாங்கேண்டா.''

ரஹ்மான் முறைத்துப் பார்த்தான்:

''வாங்கிட்டுத்தானே இருக்கேன்?''

''என்னடா முறைக்கிறே?''

''இந்த அடா புடா வாணும் சார்.''

''நீ பெரிய கவர்னரோ... ஹராம்! இந்தத் திமிரிலேதாண்டா கம்பி எண்ணறே!''

பெஞ்சுக்குக் கீழே தரையில் நின்றவர்களிடமிருந்து அவன் வாங்குவதற்காக ஒரு மேஜை மேலே உயர்ந்து நின்றது. ரஹ்மான் வாங்கவில்லை. பெஞ்சிலிருந்து கீழே குதித்தான்.

''சார்... மரியாதைகுடுத்து மரியாதைவாங்குங்க. ஹராம்னு அர்த்தம் தெரியுமா?''

''டேய், நீ இப்போ வேலே செய்யப் போறியா, இல்லியாடா?''

''போய்யா, முடியாது!''

செண்ட்ரி ரஹ்மானை நோக்கி ஓடிவர, அவன் திருப்பித் தாக்குவதற்கு ஆயத்தமானான். இந்தக் கைகலப்பு கடுங்காவலுக்கும் பல தொல்லைகளுக்கும் இடமளிக்கும். அது அவனுக்குத்தெரியும். எனினும்தயாராய் விட்டான். அதான் ரஹ்மான். பேட்டையில் நடந்த அவசியமற்ற கலகத்திற்குக் காரணமாக இருந்தவர்களைத் தாக்கிச் சிறை வந்த ரஹ்மான்.

சக கைதிகள் கூட்டம் கூடி விட்டார்கள். மேஜையைத் தூக்கிக் கொண்டிருந்தவர்கள் அதைக் கீழே வைத்துவிட்டு ரஹ்மானைச் சமாதானம் செய்வது போல் கையைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு வந்து விட்டார்கள்.

செண்ட்ரிக்கு ஆத்திரம் தணியவில்லை.

''டேய், ஒன்னைக் கவனிக்கற இடத்திலே கவனிக்கறேண்டா!''

''விடுங்கசார்... அவன்தான் கோபத்திலே என்னமோ கேட்டுட்டான்'' என்று கைதிகள் சமூகம் செண்ட்ரியைச் சமாதானப்படுத்திற்று.

இப்போது ரஹ்மானுக்கு ரம்ஜான் குஷ்கா வந்திருக்கிறது.

''ஏன் நிக்கிறே போடா!'' என்று சலாமை விரட்டினார் செண்ட்ரி.

சலாம் உடனே போகவில்லை. நின்று கொண்டேயிருந்தான்.

அப்போது சிறைக்கு உள்ளேயிருந்து ட்யூட்டி முடித்து வெளியே சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்த கான்ஸ்டபிள் ஒருவர் பையனைப் பார்த்தார்.

''யார் பையன்?''

''அந்த 746 இருக்கானே கைதி ரஹ்மான். அவன் புள்ளே.

''கையிலே என்ன?''

''அப்பனுக்கு ரம்ஜான் குஷ்கா கொண்டாந்திருக்கான். ஜெயிலுக்குள்ளே பர்மிஷன் இல்லாமே எதையும் கொண்டாரக் கூடாதுன்னு சொல்லிட்டிருக்கேன்.''

''விடுப்பா... பண்டிகை நாளு... அவங்க வீட்டிலே என்ன ஆசையா குடுத்தனுப்பிச்சிருக்காங்களோ!'' வந்த கான்ஸ்டபிளுக்

# தங்க கவரிங் நகைகளுக்கு
# தன்னிகரற்ற பெயர் "மேரி"

கண்ணைக் கவரும், அழகும், பொலிவும், தரமும் உத்திரவாதமும் உடைய உலகப் புகழ்பெற்ற 22ct "மெரி" தங்க கவரிங் நகைகளை வாங்கி அணிந்து மகிழுங்கள்!

நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் நகைகள் அனுப்பப்படும். வி.பி.பி. சார்ஜ் தனி. இலவச கேட்லாக்கைப் பெற எழுதுங்கள்!




## மேரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால்பெட்டி: 1405, 14, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600 017.

கும் ரஹ்மான் விவகாரம் தெரியும். சென்ட்ரி கோபமாக இருப்பதையும் அறிவார்.

''சரிப்பா... ஒன் டூட்டி முடிஞ்சிடுச்சா?'' சென்ட்ரி இரட்டைப் பொருளில் கேட்டது கான்ஸ்டபிளுக்கு விளங்கிற்று.

''ஓ.''

''நீ சொன்னேன்னு அந்த டைலர்கிட்டே எம் பையனுக்குத் துணி அளவு குடுத்தேன். மாசமாகப் போவுது. இதோ, அதோன்னு இழுத்தடிச்சுக்கிட்டே இருக்கான். பையன் பள்ளிக்கூடம் தொறந்துட்டாங்கப்பான்னு பிராணனை எடுக்கறான். நீ கொஞ்சம் போறப்ப சொல்லிட்டுப் போப்பா.''

''சொல்றேன்.''

கான்ஸ்டபிள் சைக்கிளில் ஏறினார்.

சலாம் காத்திருந்தான்.

சென்ட்ரி தன் பையன் ஞாபகத்திலிருந்து நழுவி சலாமைப் பார்த்தார்.

''என்னடா பையா... சொல்லிட்டேன் இல்லே?''

சலாம் மென்று விழுங்கினான். பின்பு துணிந்து சொன்னான். ''மேல் விஷாரத்திலே இருந்து வந்திருக்கேன்.''

''நீ எங்கேயிருந்தாவது வா... எங்கே யாவது போ... பர்மிஷன் இருக்கா...? இல்லேன்னு போ.''

சலாம்குனிந்துகையிலிருந்தமூட்டைக்குப் பார்வையைத் தாழ்த்தி வேதனையோடு நோக்கினான்.

விஷயம் குஷ்காவல்ல. ஒரு நிராகரிப்பு. தண்டிக்கப்பட்ட தந்தையைக் காண வந்ததற்கு ஒரு தண்டனை. திருப்பி எடுத்துக் கொண்டு போனால் அம்மா என்ன சொல்வாள்?

''போடான்னு சொல்லிட்டேன் இல்லே...'' என்று உரக்கக்கத்தினார் சென்ட்ரி.

சலாம் பயந்துவிட்டான். இனி நிற்பதில் பயனில்லை என்று புரிந்தது. திரும்ப வேண்டியதுதான். அப்பா இல்லாத ரம்ஜான் பண்டிகைக்கு.

அவன் மெதுவாகத்திரும்பினான். தயங்கியவாறே நாலைந்தடி வைத்தான். மீண்டும் நின்று அந்தப் பெரிய இரும்புக் கதவையும் மதில் சுவர்களையும் வெறித்துப் பார்த்தான். இப்போதுதான் சலாமின் கண்களிலிருந்து நீர் வழிந்தது.

அவன் கண்ணீர் விடுவதை சென்ட்ரி கவனித்தார். அவருக்கு மனசு உதைத்தது. டைலர் துணி கொடுக்காததற்காக அழுகின்ற தன் பையன் ஞாபகம் வந்தது. போன பொங்கலுக்குப் பந்தோபஸ்துக்காகத் திருவண்ணாமலைக்குப் போக நேர்ந்தபோது வந்த வருத்தம் நினைவுக்கு வந்தது.

சலாம் மெல்ல மெல்ல நடந்து போய்க் கொண்டிருந்தான். எதிலோ தோற்றுவிட்டுப் போகிறவன் மாதிரி ஒரு நடை.

''டேய் பையா!''

சலாம் காதில் அது விழவில்லை.

தோளில் துப்பாக்கியைச் சாய்த்துக் கொண்டு கைதட்டினான். சலாம் திரும்பிப் பார்த்தான்.

''இங்கே வா!''

அவன் திரும்பி வந்தான்.

''இப்படி நில்லு.''

சென்ட்ரி உள்ளே யாரையோ கூப்பிட்டான். ''அந்த 746 ஐக் கூப்பிடச் சொல்லு கோவிந்தா! அவனுக்கு வீட்டிலே இருந்து ரம்ஜான் சாப்பாடு வந்திருக்கு!''

பத்து நிமிஷத்தில் கம்பிகளுக்கப்பால் ரஹ்மான் நின்றிருந்தான்.

''வாய்யா ரஹ்மான். வீட்டிலே இருந்து ஒனக்கு ரம்ஜான் குஷ்கா வந்திருக்கு!

சென்ட்ரிக்கு ஒரு மகனின் எதிரில் அவன் தந்தையை அவமதிக்கக்கூடாதுஎன்று தோன்றிற்று.

''வாப்பா'' என்று மெதுவாகச் சொன்னான் சலாம்.

அவன் கண்களிலிருந்து கண்ணீர் பொங்கிப் பொங்கி வழிந்தது.



வித்தியாசமான கதையும், கச்சிதமான திரைக்கதையும் அமைந்துவிட்டால் டைரக்டருக்கு வேலை சுலபமாகிவிடும். மனிதனின் மறுபக்கம் இந்த



பாடல்களில் ஏமாற்றமும், மற்ற இரண்டில் சுவையும் சேர்த்திருக்கிறார்.

சுவாரஸ்யம், விறு விறுப்பு, கொஞ்சம் சஸ்பென்ஸ், நல்ல நடிப்பு வேறென்ன வேண்டும்?

— ஜெயமன்மதன்



வாக்கியத்தை ஊர்ஜிதம் செய்கிறது.

உயர உயரமான சிறைச் சுவர்களுக்குப் பின்னே, கனமான கம்பிகளுக்கு உள்ளே தூக்குத் தண்டனைக்காகக் காத்திருக்கும் சிவகுமார் அறிமுகமானபின் கதையில் சூடு பிடிக்கிறது. அப்புறம் கடைசி காட்சி வரைக்கும்வெம்மைகுறைய வில்லை.

பத்திரிகை ஆபீஸில் ஜெயஸ்ரீ வந்து சேரும் ஆரம்பக் காட்சிகள், டான்ஸ் ஆடும் ராதா கதைக்குள் அறிமுகமாகும் காட்சிகள் என்று அசந்த நேரத்தில் வந்துவிட்ட கொட்டாவிகளைத் தவிர்த்திருக்கலாம். தூக்குத் தண்டனைக் கைதியைப் பற்றி, தாராளமான கற்பனை கலந்து பத்திரிகையில் கதை எழுதி விட்டுக் கொஞ்சம் கொஞ்சம் பயப்பட்டு, அழுது, பொருமி, மனசில் பதியாத பாத்திரம் ஜெயஸ்ரீக்கு.

மாடலிங் தொழிலுக்கு வந்தபின் சிவகுமாரைக் காதலித்து, கயவன் ஒருவனால் புகைப்படங்கள் (எந்த மாதிரிஎன்றுபுரிந்திருக்கும்) எடுக்கப்பட்டு பிளாக் மெயில் செய்யப்பட்டு, அன்பான கணவனிடம் சொல்லமுடியாமல் வெந்து வேதனைப்பட்டு..... ராதாவிற்கு உன்னதமான பாத்திரம். நிறைவு.

சற்றே வித்தியாசமான மேக்கப்போடு சிறைக் காட்சிகளில் சிவகுமார். தேவையான பரபரப்பைக் கொண்டு வருகிறார். காதல் காட்சிகளில் கொஞ்சம் அசடு வழிகிறார்.

மனைவியின் மீது வெகு இயல்பாகச் சந்தேகம் புரண்டு வர, முதலில் கட்டாயமாக அதைத் தவிர்க்க முயன்று, தோற்று, வெதும்பி, வெடிக்கிறாரே அநாயாசம். படத்தின் கட்டுக்கோப்புக்கு சிவகுமாரின் நடிப்பு மெருகு கூட்டுகிறது.

வழக்கம்போல் போலீஸ் வேலையின்றித் தவிக்கிறது.

இளையராஜா இரண்டு

''ஏண்டா பண்டிகை நாள்லே அழுவுறே! ஈத் முபாரக் சொல்லு.''

''ஈத் முபாரக்'' — சலாம் விசும்பிக் கொண்டே சொன்னான்.

''ஈத் முபாரக்'' என்று கம்மிக் கரகரத்த குரலை ஒருதரம் கனைத்துச் சரி செய்து கொண்டே ரஹ்மான் பதிலுக்குச் சொன்னான்.

சென்ட்ரிக்கு மனத்தில் கரித்துக் கொண்டிருந்த எதுவோ எங்கோ அடித்துச் சென்று விட்டது.

''வாங்க சார் சாப்பிடலாம்'' ரஹ்மான் சென்ட்ரியைக் கூப்பிட்டான்.

''நீ சாப்பிடுய்யா. ஒனக்குத்தான் ஆசையோட கொடுத்தனுப்பிச்சிருக்காங்க.''

''நீங்களும் சேர்ந்துட்டா இன்னும் சந்தோஷமா இருக்கும்!'' மேல் விஷாரத்திலிருந்து வந்திருந்த அந்த குஷ்கா ரஹ்மானை ஒரு பண்டிகை மகிழ்ச்சிக்கு உந்தியிருந்தது. அவன் உண்மையான மன ஈடுபாட்டோடு தான் சென்ட்ரியையும் சாப்பிடக் கூப்பிட்டான்.

சிறை விதிகளும் அதிகாரமும் மனிதர்கள் சற்று நேரம் மனிதர்களாவதற்கு அவகாசமளித்து மௌனமாய் விட்டன.

''பெருமாளு... பத்து நிமிஷம் கொஞ்சம் டூட்டி செஞ்ச் பண்ணிக்கப்பா! ரஹ்மான் பாய் குஷ்கா சாப்பிடக் கூப்பிடறாரு'' என்று ஒரு சகாவை அழைத்தார் சென்ட்ரி.

''பையனும் கொஞ்சம் சாப்பிடட்டுமே!''

''ஓ... முன்னா, நீயும் கொஞ்சம் சாப்பிடுவே வா.''

மூவரும் சாப்பிட உட்காருமுன் சென்ட்ரி ரஹ்மானுக்குப் பண்டிகை வாழ்த்துச் சொன்னார். ஈத் முபாரக்.



* குறுகலான பஸ் ஸ்டாண்டு.



* ஏரியை ரசிக்கும் இளஞ்ஜோடி



* மாயன்.

# கொடைக்க

## – ஒரு ர



* லாயம் கிடைக்குமா?



* கொடைக்கானலின் ஒரு தோற்றம்.



# னல்
## ண்ட்-அப்

* கொடைக்கானல் செல்லும் பஸ், மலை மீது ஏறிச் சென்று கொண்டிருக்கும்போதே பஸ்ஸுக்குள்ளிருந்து, 'அதோ தெரியுது டி. வி. டவர்!' என்று குழந்தைகள் கொடைக்கானலை அடையாளம் காட்டுகின்றன. 'கோக்கர்ஸ் வாக்'கை ஒட்டி உயரமான பகுதியில் அமைந்திருக்கும் டி. வி. டவர் இன்று கொடைக்கானலில் ஒரு கூடுதல் அட்ராக்ஷன். ஆனால் கொடைக்கானல் டி. வி. நிலையம் எப்போது இயங்க ஆரம்பித்து எப்போது முதல் சென்னை டி. வி. நிலையத்தின் தமிழ் நிகழ்ச்சிகளைத் தென்னகத்தில் பலரும் காண ஒளிபரப்பும் என்பது பல காலமாக விடை காணுமலே இருந்து வரும் கேள்விக் குறி.

* ரூ., 1.50 மட்டும் வாங்கிக் கொண்டு ஏழைகளுக்கு வைத்தியம் செய்து கொண்டிருக்கும் டாக்டர் ராம்நாத், மாவட்ட மருத்துவ அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். ஷேக் அப்துல்லா கொடைக்கானலில் காவலில் வைக்கப்பட்டிருந்த போது, இவர்தான் ஷேக் அப்துல்லாவுக்கு டாக்டராக இருந்தாராம். அவரைப் பற்றிக் கேட்டால், ''ஓ! அவர் ஓர் அற்புதமான மனிதர்!'' என்று புகழ்கிறுர். ''பணம் உள்ளவங்களுக்குத்தான் ஸார் கொடைக்கானல். யெஸ்! இங்கு நடப்பது பணம்படைத்தவர்களுக்கான சுற்றுலா. இங்கிருக்கும் அரசு விருந்தினர் மாளிகைகளுக்கோ அல்லது தமிழ்நாடு ஹோட்டலுக்கோ சென்று பாருங்கள். ஒரே அரசியல்வாதிகள், அதிகாரிகள் கூட்டமாகத்தான் இருக்கும். பொது மக்கள் தங்குவதற்கு இடம் கிடைக்காமல் அல்லாடுகிறுர்கள். தனியார் லாட்ஜுகளை நடுத்தர மக்கள் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத அளவுக்கு வாடகைக் கொள்ளை! இதைத் தடுக்கச் சட்டம் ஏதாவது கொண்டு வந்தால் கூட நன்ருக இருக்கும்!'' என்று சொல்லும் ராம்நாத்தின் இன்னொரு கவலை :— கொடைக்கானலுக்கு அழகைக் கொடுப்பதோடு, மழை பெய்வதற்கும் காரணமாக இருக்கும் மரங்களையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக வெட்டித் தள்ளிக் கொண்டிருப்பது! ''ஒரு கிளையைக் கூட வெட்டக் கூடாது'' என்று அரசு தடை போட வேண்டும். இங்குள்ள டவுன்ஷிப் மரங்களை ஏலம் விடுகிறது. பத்து மரங்களை ஏலம் விட்டால், ஏலம் எடுப்பவன் நூறு மரங்களை வெட்டிக் கொண்டு போகிறுன். இதைத் தடுக்க ஆளில்லையே!'' என்று ஏங்குகிறுர் டாக்டர் ராம்நாத்.



* மழைக்கு ஒதுங்க...



* ராம்நாத்



* ராஜகோபால்



* மகளிர் பல்கலைக்கழகம்.

* கலையரங்கம்



* புதுக்கோட்டை ராஜா விஜய ரகுநாத் தொண்டைமானின் மைத்துனர்தான் வி. ஆர். ராஜகோபால். பழனி மலைப் பாது காப்புக் கழகம் என்று ஓர் அமைப்பை ஆரம் பித்து இருக்கிறார்கள். பாம்புப் பண்ணை விட்டேகர் மற்றும் கொடைக்கானலைச் சேர்ந்த பிரபலமானவர்கள் அங்கம் வகிக் கும் இந்தக் கழகத்தில் ராஜகோபாலனும் ஓர் உறுப்பினர். மலையின் அழகைப் பாது காக்க வேண்டும் என்பதற்காகவே இயங்கு கிறது இந்த அமைப்பு. மலைச் சரிவுகளில் இருக்கும் கிராமங்களுக்குச் சென்று, 'மரங் களை வெட்டக் கூடாது!' என்று பிரசாரம் செய்கிறார்கள். 'இந்த மலை கிராம மக்களுக்கு அரசு ஒழுங்காக அடுப்பெரிக்க விறகு விநி யோகம் செய்தால் இந்த மக்கள் மரத்தை வெட்ட மாட்டார்கள்' என்று சொல்கிறார் ராஜகோபால். ராஜகோபாலும் அவரது நண்பர்களும் 'கார்சாக்' என்று ஓர் அமைப்பும் வைத்திருக்கிறார்கள். அதன் முழுப் பெயர் **Co-ordinating Council for Social Concern in Kodaikanal** இந்த அமைப்பு பல அற் புதமான பணிகளைச் செய்து வருகிறது. மலைக் கிராமங்களுக்கு டாக்டர்களை வேனில் அழைத்துச் சென்று அம்மக்களுக்குச் சிகிச்சையளிக்கிறது. ராஜகோபாலே தனிப் பட்ட முறையில், சாகும் தறுவாயிலுள்ள முதி யோர்களுக்கான ஓர் இல்லத்தை நடத்திக் கொண்டிருக்கிறார். நாங்கள் அந்த இல்லத் திற்குச் சென்ற போது, அந்த முதியவர்கள் டீ. வி. பார்த்துக் கொண்டிருந்தார்கள். ராஜகோபாலைப் பார்த்ததும், "ஐயா... ஐயா..." என்று பாசத்தைக் கொட்டி விட் டார்கள். அங்கே சந்தோஷம் என்கிற 94 வயது முதியவரைச் சந்தித்தோம். சந்தோஷத் திற்கு ஐந்து பெண்டாட்டிகள். சுமார் முப்பது பேரன், பேத்திகள். பெண்டாட்டி களில் நால்வர் இறந்து போனார்கள். "யாரும் என்னைக் காப்பாத்தலே சாமி! ஐயாதான் எங்களுக்குஉதவி பண்றார்!" என்றுகைகளைக் கூப்பிக் கொண்டு சொன்னார் சந்தோஷம்! ஆண், பெண் என்று மொத்தம் பதினெட்டு முதியவர்கள் இங்கே தங்கியிருக்கிறார்கள்.

* கடந்த தேர்தலில் பெரியகுளம் தொகுதி யில் (கொடைக்கானல் அந்தத் தொகுதி யைச் சேர்ந்ததுதான்) போட்டியிட்டுத் தோல்வியுற்றவரும் கொடைக்கானல் நகர தி.மு.க.செயலாளருமான மாயன், தோற்றுப் போனதைப் பற்றிக் கவலைப்படாமல் மக்கள் பணிகளைச் செய்து கொண்டிருக்கிறார். "கீழி ருப்பவர்கள்தான் 'கொடைக்கானல், கொடைக்கானல்' என்று ஆவலுடன் வரு கிறார்கள். ஆனால் இங்கிருப்பவர்கள் நிலை படுமோசம்! இதோ பாருங்கள் எங்கள் பஸ் ஸ்டாண்டை. உலகத்தின் பல பகுதிகளிலிருந் தும் இங்கு வருகிறார்கள். ஆனால் சேர்ந்தாற் போல் மூன்று பஸ்கள் கூட நிற்க முடியாது. ஆயிரக்கணக்கில் டூரிஸ்டுகள் வரும் இந்த இடத்திலா இப்படியொரு பஸ் ஸ்டாண்ட்? புது பஸ் ஸ்டாண்ட் கட்டுவதற்காக இடம் ஒதுக்கப்பட்டு வெகு நாட்களாகிறது. இன்னும்கட்டவில்லை. இப்போது அந்த இடத் தில் ஆக்கிரமிப்பு நடந்து கொண்டிருக் கிறது. பஸ் ஸ்டாண்ட்தான் பிரச்னையென் றால் ஆஸ்பத்திரியும் பிரச்னைதான். அங்கே போதுமான படுக்கை வசதி கிடையாது. குளிர் காலத்தில் நோயாளிகளுக்குக் கம்பளி கொடுக்க மாட்டார்கள். டாக்டர்களுக்கும் பஞ்சம். அவசர மருந்துகள் கிடையாது. ஏதாவது எமர்ஜென்ஸி என்றால் நோயாளி களின் கதி அதோ கதிதான்! சரி; அதுதான் போகட்டும் என்றால் கல்விப் பிரச்னையைப் பாருங்கள். கொடைக்கானல் தாலுகாவில் ஒரு கல்லூரி கூடக் கிடையாது. இருப்பது ஒரே ஒரு மேல்நிலைப்பள்ளி. ஆசிரியர்க ளுக்குத் தங்கும் வசதியில்லாததால் பல ஆசிரியர்கள் வத்தலகுண்டிலிருந்துதான் வருகிறார்கள். இவர்கள் பாதி நாட்கள் பிரெஞ்சு லீவுதான். பள்ளியின் தரம் இறங் கிக் கொண்டே இருக்கிறது. மாணவர் களுக்கும் போதுமான வசதிகள் கிடையாது. இங்கு தனியார் பள்ளிகளுக்குத்தான் மவுசு அதிகம். கடந்த 2.7.86 அன்று இங்கு தனி யார் பள்ளி ஒன்றைத் திறக்க வந்த கல்வி அமைச்சர் அரங்கநாயகம் எதிரில் உள்ள அரசுப் பள்ளியை எட்டிக் கூடப் பார்க்க



* ஹோட்டலுக்குச் செல்லும் குடிநீர்...

* தனுஷ்கோடி



வண்டியிலுள்ள பீப்பாய்க்கு ஏரியில் இருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்தார்கள். நமக்கு லேசான ஆச்சரியம்! இந்தத் தண்ணீரை எடுத்துக் கொண்டு போய் என்ன செய்யப் போகிறுர்கள் என்று! எதற்கு என்று தெரிந்து கொள்ளக் கேட்ட போது, 'துணி துவைப்பதற்கு!' என்று பதில் வந்தது. ஆனல் தண்ணீர்ப் பஞ்சத்தின் போது இந்த ஏரித் தண்ணீர் தான் பல ஹோட்டல்களில் குடிநீராகப் பயன்படுத்தப்படும் என்று சிலர் சொன்ன போது பகீரென்றது.

* பொழுதுபோக்குவதற்குஎன்றுபார்த்தால் இரண்டு கலை அரங்கங்கள் இருக்கின்றன. ஒன்று தனியார் வசம் உள்ளது. அது ஒழுங்காக இயங்கி வருகிறது. இன்னென்று 'டவுன் ஷிப்'புக்குச் சொந்தமான நடிப்பிசைப் புலவர் கே. ஆர். ராமசாமி பெயரிலுள்ள கலை அரங்கம். இது கடந்த ஆறு மாத காலமாகப் பூட்டியே கிடக்கிறது.

* கொடைக்கானல் பற்றிச் சொல்லும் போது கொத்தடிமைகளைப் பற்றிச் சொல்லா விட்டால் எப்படி? கொடைக்கானல் கொத்தடிமைகள் மீட்பு—பாதுகாப்புச் சங்கத்தைச் சேர்ந்த தனுஷ்கோடியைச் சந்தித்தோம்.

''மீட்கப்பட்ட கொத்தடிமைகளுக்குக் கூக்கல் என்ற இடத்தில் பயிரீட நிலம் கொடுப்பதாக அரசு கூறி வருகிறது. அதற்குப் பதிலாக, மரப்பட்டை உரிக்கும் தொழிலாளர்களைக் கொண்டு ஒரு கூட்டுறவு சங்கம் ஏற்படுத்தி, இப்போது அவர்கள் செய்து கொண்டிருக்கும் அந்தத் தொழிலைச் சங்கத்திடமே ஒப்படைக்க வேண்டும். இவர்களின் குழந்தைகள் படிக்க அரசே பள்ளிக்கூடங்களைத் திறக்க வேண்டும். கொத்தடிமைக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பையனைக் கடந்த 16.4.86 முதல் காணவில்லை. புகார் கொடுத்தும் போலீஸ் எந்தவித நடவடிக்கையும் எடுக்கவில்லை''—என்றுநீண்ட கோரிக்கை—புகார்ப் பட்டியலை வாசித்தார் அவர்!

வில்லை!'' என்று வருத்தப்படுகிறுர் மாயன்.

* மாயனிடம் விடைபெற்றுக் கொண்டு அன்னை தெரஸா மகளிர் பல்கலைக்கழகத்தைச் சென்று பார்த்தோம். நாங்கள் சென்ற அன்று துணைவேந்தர், பதிவாளர் யாருமே ஊரிலில்லை. (இங்கேயுள்ளவர்களின் குற்றச்சாட்டு—பெரும்பாலான நாட்களில், துணை வேந்தர் சென்னையில்தான் இருக்கிறுர் என்பது!) இந்தப் பல்கலைக்கழகத்தில் வரலாறு, தமிழ், கல்வி என்று மூன்று துறைகளின் கீழ் எம். ஃபில் பட்டத்திற்கும், பி ஹெச்.டி. பட்டத்திற்குமாக மொத்தம் எட்டுமாணவிகள் ஆராய்ச்சிசெய்துகொண்டிருக்கிறுர்கள். 'ராஜபாளையம் ராஜுக்கள் குடும்பத்தில் பெண்கள் நிலை', 'மரமேறும் தொழிலாளர்கள் வீட்டில் பெண்கள்' என்று பல்வேறு தலைப்புகளில் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறுர்கள். ஆராய்ச்சி செய்யும் மாணவிகளுக்கு இன்னும் உதவிப் பணம் கொடுக்கப்படவில்லையாம்! இந்தப் பல்கலைக்கழகத்துக்குப் பல்கலைக்கழக மானியக் குழுவின் நிதியுதவி கூட இன்னும் கிடைக்கவில்லையாம்!

* மேகக் கூட்டங்கள் கண்ணுமூச்சி ஆடுவதும் Mist என்னும் பனிப்படலம் நம்மை மாய உலகத்தில் தள்ளி விடுவதும் அவ்வப்போது வரும் மழை பன்னீராய்த் தூவி விட்டுப் போவதும் கொடைக்கானலில் சகஜம். காலை வேளைகளில் ஏரியைச் சுற்றி வாக்கிங் செல்பவர்கள் திடீரெனப் பெய்யும் மழைக்கு ஒதுங்குவதற்காக சிறுசிறு அறைகளைப் போல் அங்கங்கே கட்டியுள்ளார்கள். ஆனல் அந்த இடங்களெல்லாம் பராமரிக்கப்படாததால் மண் மூடிப் பாழடைந்து கிடக்கின்றன. அதேபோல், வரும் டூரிஸ்டுகள் குதிரைகளின் மூலம் ஏரியைச் சுற்றிப் பார்ப்பதால்குதிரைகளை வைத்துக்கொண்டு பிழைப்பவர்கள் பலர் இருக்கிறுர்கள். ஒரு குதிரை லாயம் கட்டிக் கொடுத்தால் அந்தக் குதிரைகள் சாலைகளிலேயே அசிங்கம் செய்வதைத் தவிர்க்கலாம்.

* ஏரியைச் சுற்றி வந்து கொண்டிருந்த போது, ஒரு குழாய் மூலம் ஒற்றை மாட்டு

— கௌசல்யா

மேலட்டையிலுள்ள கொடைக்கானல் 'பில்லர் ராக்ஸ்' வண்ணப்படம்:
— வித்யாவ்ரதா

"எதற்காக இத்தனை உணர்ச்சி வசப்பட வேண்டும்?"

பக்கத்துப் போர்ஷன் காரியிடம் கேட்க வேண்டும் போலிருந்தது.

''நானாக இருந்தால் அழகாகச் சமாளித்திருப்பேன்; நிதானமாகப் பேசியிருப்பேன்; இங்கிதத்துடன் நடந்து கொண்டிருப்பேன்; உப்புப் பெறாத விஷயத்துக்கு முட்டிக் கொண்டிருக்க மாட்டேன்; கொஞ்சம் விட்டுக் கொடுத்து... விட்டுக்கொடுத்தல்என்பது எவ்வளவு சந்தோஷம் தருகிற விஷயம்....! ச்சு...''

பக்கத்துப் போர்ஷனில் சச்சரவு உச்ச கட்டத்தை அடைய....

''நீ ஒழிஞ்சாத்தான் இந்த வீடு உருப்படும்!''

சொல்லிவிட்டு அவன் அரைகுறையாகச் செருப்பை மாட்டிக் கொள்ளுவது தெரிந்தது. அப்படியே காலைத் தேய்த்துத் தேய்த்து நடந்து, தெருவுக்குப்போய்ச்செருப்பைச் சரி செய்து, ஒரு வேகத்தோடு தெருவோடு நடக்க...

''அங்கே என்னடி வேடிக்கை, பூமா? பிள்ளையாத்துக்காரா ரெண்டுமூணு பேர் வந்திருக்கா. 'கிடுகிடு'ன்னு முகத்தை அலம்பிண்டு, 'பளிச்'சினு ஒரு புடைவையைக் கட்டிண்டு அவாளை வந்து நமஸ்காரம் பண்ணு.''

அம்மா உடம்பு முழுவதும் பரபரப்பு. கைகால்களில் லேசாக நடுக்கம். 'பிள்ளை வீட்டுக்காரர்கள் வந்திருக்கிறார்கள்' என்பதே உடலில் ஒரு பயத்தைத் தோற்றுவிக்கப் போதுமானதாகஇருந்தது. கூடவே இருந்து அவசரப்பட்டாள். 'ஜம்பு, ஜம்பு....'

''நீ வீணைகூட வாசிப்பாயாமே! சங்கரன் சொன்னான். 'பூமா'வுக்கு அது தெரியும். இது தெரியும்னு ஒரு லிஸ்டே போட்டுக் கொடுத்து.....''

'பெரிய மச்சினர்'–அம்மா காதுக்கருகில் முணுமுணுத்தாள். கூடவே இன்னொருவர்.... யார் என்று தெரியவில்லை; கொஞ்சம் குட்டையாக இருந்தார்.

''எங்க சங்கரன் ரொம்பச் சாது! பரமார்த்தி! அடிச்சா அழத் தெரியாதுன்னு சொல்ற சாது. உன்னைப் பார்த்தால் கெட்டிக்காரியாத் தெரியறது. இந்தக் காலத்திலே அப்படித்தான் இருக்கணும்....'' என்றார்.

''இவளும்....'' அவசரம் அவசரமாக அம்மா இடைமறித்தாள். ''வெளி உலகமே தெரியாமல் வளர்ந்துட்டா. பெயருக்கு ஏத்த மாதிரி ரொம்பப் பொறுமை. நானே சொல்லிக்கக் கூடாது....''

அவர்கள் சற்று நேரம் உட்கார்ந்திருந்தார்கள்.

''அவர் — மாமா எப்போது வருவார்?''

''தெரியல்லியே! வர நேரம்தான். காணுமே!'' அம்மா வாசலுக்குப் போய் எட்டிப் பார்த்தாள்.

''கொஞ்சம் பேசணும். வந்தால் போன் பண்ணச் சொன்னால் கூட....''

எழுந்தார்கள்.



# அந்நியாயம்

ஜி. நாராயணன்

இரவு நேரம் கழித்துத்தான் அப்பா வீடு திரும்பினார். கல்யாண ஏற்பாடுகளைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. பணத்துக்கு அலைய வேண்டியிருக்கிறது. இன்னும் கவலைகள்.... 'ராமா' என்று அலுத்துப் போய் உட்கார்ந்தார் அப்பா.

''பிள்ளையாத்துக்காரா வந்திருந்தா. இவ்வளவு நேரம் பார்த்துட்டு இப்பத்தான் போனா!'' என்று அம்மா சொன்னாள்.

''என்ன வேணுமாம்?''

''தெரியல்லே. பேசணும்னு சொன்னா.''

அப்பா ஒருமாதிரி நெற்றியைச் சுளித்துக் கொண்டார். எதற்காக இருக்கும் என்பதுபோல் யோசனை செய்தார். 'உப்'பென்று வாயைப் பலூன் மாதிரி ஊதி 'ப்ஸ்' என்று காற்றை வெளியே விட்டார்.

''ஒண்ணு பண்ணுங்கோ! முத்துசாமியை அழைச்சிண்டு போய் அவாளை ஒருநடை நேரிலே பாருங்கோ!''

''எந்த முத்துசாமி?''

''வேறே யாரு? எங்க அண்ணா முத்து!''

''அவனையா?'' அந்த அலுப்பிலும் அப்பாவுக்குச் சிரிப்பு வந்தது. ''மூணாம் வருஷம் அவன் பொண்ணுக்குக் கல்யாணம் பண்ணின லட்சணம்.... மாப்பிள்ளை அழைப்புக்கு 'கார்' ஏற்பாடு பண்ண மறந்து போய்த் திண்டாடி, சிரிப்பாய்ச் சிரிச்சு, அழுகுதான்! வேறே ஆளா கிடைக்கல்லே? போயும் போயும்....'' அப்பா இன்னும் பெரிதாகச் சிரிக்க,

அம்மா முகம் மாறியது.

''ஒரு காரியம் செய்யலாம்.''

''என்ன?''

''பேசாமல் உங்க தம்பி 'கோபு'வை அழைச்சிண்டு போங்கோ!''

''எதுக்கு?'' புரியாமல் அப்பா கேட்டார்.

''அங்கே போறது. அண்ணன்—தம்பி ரெண்டு பேருமா, 'ரெட்டைப் பனைமரம் நிற்குமாம்'ன்னு நிற்கிறது. அவா, கண்ணைத் திறன்னா சட்டுன்னு வாயைத் திறக்கிறது. வேறே என்ன?''

இப்பொழுது சிரித்தது அம்மா.

அப்புறம் அந்த இடத்தில் ஓர் அரைமணி நேரம் நடந்த ரகளையை நினைத்தபடியே இரவு முழுவதும் பூமா உட்கார்ந்திருந்தாள். எத்தனை ஏச்சுக்கள், பேச்சுக்கள்..... குப்பைக் குழியைக் கிளறுகிற மாதிரி இருவரும் பழங்கதையையெல்லாம் பறக்கவிட்டு.... அந்த இடத்தையே நாற அடித்து....

ஒரு கணவன்—மனைவி என்றால், இப்படியா நாக்கு நுனியால் நெருப்புப் பந்தங்களை வீசிக்கொள்வார்கள்? ஒருவரையொருவர் எப்படிக் கீழே தள்ளி வேடிக்கை பார்க்கலாம் என்று காத்திருப்பார்கள்.... ச்சே!

'எங்க சங்கரன் ரொம்பச் சாது. அடிச்சா அழக் கூடத் தெரியாது!'

இதை ஏன் என்னிடம் சொல்ல வேண்டும். நான் அவரை அடிக்கப் போகிற மாதிரி....

'இவ பெயருக்கு ஏத்தமாதிரி ரொம்பப் பொறுமை!'

இப்படி ஒரு சாதுவும்—பொறுமையும் சேர்த்து





அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1986
ரூ 250/—
மூன்றாம் பரிசு பெறும்
முதல் சிறுகதை



## மணல் அடைத்துக் கொண்ட அணை!

ஆத்தூர் தொகுதியில் கன்னிவாடிக்கு அருகில் நாயோடை என்னும் அருவி மலையிலிருந்து இறங்குகிறது. அந்த இடத்தில் தடுப்பு அணை ஒன்று கட்டினார்கள். அதில் மணல் அடைத்துக் கொண்டு, செடி கொடிகள் முளைத்து மழைக் காலத்தில் தண்ணீர் தேங்கி நிற்க வசதியில்லாமல் வீணாகிறது. இந்த நிலையைப் போக்க எத்தனையோ கடிதங்கள் எழுதி சலித்துவிட்டார்கள் மக்கள். தண்ணீரைச் சேமித்து வைத்தால் சில நூறு ஏக்கர்கள் பலன் பெறும்!



## சாலையோர (விபசார) விடுதி

பழநி—ஒட்டன்சத்திரம் சாலையில் பாண்டியன் போக்குவரத்துக் கழகம் சாலையோரத்தில் சிற்றுண்டிச் சாலை, கழிப்பறை ஆகியவற்றைக் கட்டியது. ஆனால் பாண்டியன் போய் ராணி மங்கம்மா போக்குவரத்துக் கழகம் ஆன பிறகு இந்த சிற்றுண்டி விடுதிகளையும், கழிப்பறைகளையும் 'அம்போ' என்று விட்டுவிட்டார்கள். இப்போது கழிப்பறைகள் இடிந்து விழும் நிலையில் இருக்கின்றன. விடுதி இரவு நேரங்களில் சில இரவு ராணிகளின் குடியிருப்பாக மாறி வருகிறதாம்!

நடத்தப் போகிற குடித்தனம் எப்படி இருக்கும்?

அங்கே சத்தம் இருக்காது. சண்டை இருக்காது. ஒருவரை ஒருவர் கிழித்துப் போடுகிற பார்வை இருக்காது. வசவு இருக்காது. சிரிப்புத்தான் இருக்கும். சந்தோஷம்தான் இருக்கும். விட்டுக் கொடுத்தல் இருக்கும்!

அப்படியே அவருக்கு ஏதாவது எரிச்சல் வந்தாலும், என்னால் எதையும் அழகாகச் சமாளித்துக் கொண்டு போய்விட முடியும். முடியும். முடியும்....

எல்லாக் கல்யாணங்களும் இப்படித்தான் இருக்குமோ? தெரியவில்லை! பூமா கல்யாணத்தில் கொஞ்சம் முணுமுணுப்பு இருந்தது. மூஞ்சித் தூக்கல்கள் இருந்தன. கோப தாபம் இருந்தது.

மாமியார் வீட்டுக்கு வந்தபின், இந்த ஒரு மாதமாகப் பூமா மிகவும் ஜாக்கிரதையாக இருக்கிறாள். சிரித்தபடி வளைய வருகிறாள். யாருடனும் எந்தவித அபிப்பிராயபேதமும் வராதபடி பார்த்துக் கொண்டுவிட்டாள். 'சபாஷ்' என்று தன்னைத்தானே தட்டிக் கொடுத்த சமயம் —

இடையில் ஒருநாள் அம்மா இவளைப் பார்க்க வந்திருந்தாள். சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தாள். கிளம்புகிற சமயம், 'பெரியவா, சொல்றதைக் கேட்டு, புரிஞ்சுண்டு நடந்துக்கோ!'' என்றாள் மையமாக.

''என்னம்மா சொல்றே?''

''சொல்றேன்.... மாமியார்—மாமனார் ஒரு வார்த்தைதான் சொல்லுவா. அதிலே ஆயிரம் அர்த்தம் இருக்கும். எந்த அர்த்தத்திலே சொல்றான்னு உணர்ந்து நடந்துக்கணும். 'வீணை வாசிக்கிறியாம்மா இப்ப'ன்னு கேட்டா, 'மொதல்ல வீணையை வைச்சுட்டு எழுந்து வா'ன்னு அர்த்தம்....''

இவளுக்கு மண்டையில் அடித்த மாதிரி ஆயிற்று! ஏழெட்டு நாட்கள் முன்பு ஒரு சாயந்திரம் வீணையை வைத்துக் கொண்டு உட்கார்ந்தபோது, மாமியார்க்காரி, இதே வார்த்தையைச் சொன்னது சட்டென்று நினைவுக்கு வர....

சே! என்ன மனிதர்கள்? 'எழுந்து வாடி' என்று 'பளிச்'சென்று என்னிடம் சொல்லுவதை விட்டுவிட்டு.... உரிமையில்லையா? பயமா? இதில் என்ன வறட்டுக் கௌரவம்? ஓநாய்—ஆடு கதை மாதிரி, குற்றம் கண்டு பிடிக்க இப்படிச் சொல்கிறாளா?

''வேறே என்ன சொன்னா எங்க மாமியார்?''

''குத்தமா ஒண்ணும் சொல்லல்லே.... ஆனா, ஒண்ணு நினைவிலே வைச்சுக்கோ, ஏதாவது தப்புன்னா, உடனே, 'இவ பெண்ணை வளர்த்த லட்சணம் இப்படி'ன்னுதான் என்னை எல்லாரும் இடிச்சு இடிச்சுக் காட்டுவா....''

''அப்படிச் சொன்னா இங்கே யாரா வது?''

''சொல்லல்லேடி அசடு! இப்படியெல்

டிக்கட் வாங்கியவுடன முடிவுகளை கண்டு
பரிசு பெற இது ஒரு அரிய வாய்ப்பு

பல பம்பர் பரிசுகளை மக்களுக்கு அளித்த
ராயல் பூடான் அரசின்
மற்றும் ஒரு மாபெரும் பரிசுத் திட்டம்
உடனடி பரிசுகள்



# ராயல்
# உடனடி பம்பர்

## பரிசுச் சீட்டுத் திட்டம்!

பரிசுச்சீட்டு வரலாற்றில் இதுவே முற்றிலும் மாறுபட்டது.

டிக்கட்டுகள் 10.8.86. முதல் கிடைக்கும்.

வெளியிடுபவர் :
அஸிஸ்டெண்ட் செகரட்ரி,
ராயல் பூடான் அரசு,
பண்ட்ஷோலிங்.




ஆர்கனைசர்ஸ் :
டெக்கான் ஏஜென்ஸி குரூப் :
அன்ராஜ் லாட்டரீஸ்,
சென்னை-டில்லி-சூளூர்பேட்டை

## வாசகர் பட்டி மன்றம்
## பரிசு ரூ 300

**மாதாந்திர நாவல்கள் :**

**மக்கள் ரசனையை வளர்க்கின்றன**

**மக்கள் ரசனையைக் கெடுக்கின்றன**

உங்கள் கருத்து என்ன?

அனுபவபூர்வமான எண்ணங்களை கல்கியில் சுமார் அரைப் பக்க அளவில் எழுதி அனுப்புங்கள்.

இரு கட்சியிலும் ஒவ்வொரு கட்டுரை சிறந்ததெனத் தேர்வு பெற்றுப் பிரசுரமாகி தலா ரூ 100 பரிசு பெறும்.

தவிர இருதரப்பிலும் ஐந்து ஐந்து கட்டுரைகளிலிருந்து முக்கியமான ஒவ்வொரு கருத்து மட்டும் பிரித்தெடுக்கப் பட்டுப்பிரசுரமாகும். இவற்றுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 10.

ஒவ்வொரு கட்சியும் பெற்ற மதிப் பெண்களின் விவரமும் இடம் பெறும்.

**முடிவு தேதி 1.9.86**

ஒரு கோரிக்கை: உறையின் மேல் "பட்டிமன்றம்—3" என்றுகுறிப்பிடவும்.

ஒரு நிபந்தனை: கீழே விலாசமெழுதி இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து உங்கள் கட்டுரையுடன் இணைக்க வேண்டும்.

பெயர்: ..................................................

விலாசம்: ..................................................

..................................................

லாம் உலகத்தில் நடக்கும்னு சொல்ல வரேன். நீ எல்லாத்தையும் மறந்துட்டு எப்பவும் போலச் சிரிச்சுண்டு இரு....."

அம்மா எதையோ மழுப்புகிற மாதிரி இருந்தது.

மாமியார் ரொம்பவும் இயல்பாகப் பேசுகிற மாதிரி தெரிந்தது. ஆனால் மனத்துக்குள் இப்படி ஒரு சாக்கடையா? இந்த ஒரு மாதமாக நடந்தஒவ்வொன்றும்இப்பொழுது மனத்தில் வர, பேசியதையெல்லாம் மெல்ல அசை போட்டு.....

அம்மா போனபிறகும் இதையே நினைத்த படி உட்கார்ந்திருந்தாள்.

**சா**யந்தரம் வரும்போதே சங்கரன் அலுப்பாக வந்தான். சட்டை—பனியன் எல்லாவற்றையும் கழற்றிப் போட்டுவிட்டு, 'கசகச' வென்று உடம்பெல்லாம் வியர்வை பளபளக்க அப்படியே வெறும் உடம்போடு உட்கார்ந்தான்.

"என்ன பூமா, டல்லா இருக்கே?"

"ஒண்ணுமில்லே!"

"உன்னைப் பார்த்தால் அப்படித் தெரியல்லே....."

"இல்லே!" திரும்பவும் சொன்னாள். சொல்லுகிறபோதே துக்கம் நெஞ்சையடைத்தது. இவரிடம் எதையும் சொல்லக்கூடாது என்ற வைராக்கியம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைய, இவரைவிட்டால் எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? சுகமோ, துக்கமோ இனி இவரிடம்தானே பகிர்ந்து கொள்ள வேண்டும்! அம்மாவிடம் சொன்ன மாதிரி மாமியார் இவரிடமும் எதையாவது சொல்லியிருந்தால்..... என்னைப் பற்றித் தவறாக இவர் எடுத்துக் கொண்டால்..... என்னுடைய தரப்பு நியாயத்தையும் இவரிடம் சொல்லிவிட வேண்டும்.

"வந்து.... அம்மா.... நம்ப அம்மா.... நான் ஏதாவது தப்புப் பண்ணியிருந்தால் நேரே என்கிட்டே சொல்லியிருக்கலாம். அதை விட்டுவிட்டு....."

"ஆரம்பிச்சாச்சா?"

அவன் அலுத்துக் கொண்டான். இவள் சொல்லச் சொல்ல முகம் வெறுப்பில் சுருங்கி, மெல்ல மெல்லக் கடுகடுக்க, பல்லைக் கடித்தான்.

இவன் முகம் லேசாகச் சிவக்க ஆரம்பித்து மெதுவாகச் செம்பருத்தி நிறத்துக்கு வர, கோபத்தை அடக்கச் செய்த பிரயத்தனங்கள் பின்வாங்க.....

படிப்படியாக அவர்கள் வார்த்தைகளில் உஷ்ணம் ஏற.....

அந்தச் சூடு தாங்காமல் குரல் உயர, உயர...

அவன் ரொம்பவும் சாது.....

அவள் பெயரிலேயே பொறுமை இருக்கிறது.....

இருந்தும்.....?

எதற்காக இத்தனை உணர்ச்சி வசப்பட வேண்டும்?

பக்கத்து வீட்டில் கல்யாணத்துக்கு இருக்கிற ஒரு பெண் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தாள்!

## பட்டுக்கோட்டை பிரபாகர்

# எங்கே காணவில்லை

**3**

"என்ன சொன்னே?'' என்றார் நாகராஜன் வெப்பமாக. குரலில் இருந்த இரும்பு மனத்தில் இல்லாமல் ஏ.சி.யின் செல்லக் குளிரைத் தாண்டி முகத்தில் வியர்த்தது.

''உங்க உயிரைக் கேட்டேன், தந்துடுவீங்களா, என்ன?'' என்றது ரிசீவர்.

''சூசை, இதென்ன விளையாட்டு?''

''பச்சைக் குதிரை! நீங்க குனிங்க. உங்க முதுகிலே கை வைச்சு நான் தாண்டறேன். முதலாளி, எதுக்காகக் கோபப் படறீங்க?''

''உன்னைப் போன் பண்ணக் கூடாதுன்னு நான் கண்டிப்பா சொல்லியிருந்தேன்.''

''சாதாரணமா நான் பண்ணியிருக்கேனா? இப்போ அவசரம், அதான் பண்ணினேன்.''

''சூசை போனை வச்சிடு. நாளைக்கு உன்னைச் சந்திக்கிறேன்.''

''இன்னிக்குச் சாயங்காலம் உங்க ரீஸப்ஷன் இருக்கே...''

''இருந்தா?''

''நான் வர வேணுமா?''

''வேணும்.''

''நான் சின்னம்மாவைப் பார்க்க வேணுமா? ரெண்டு வார்த்தை யாவது பேச வேணுமா?''

''சூசை, என்ன உன்னோட நோக்கம்?''

''சூளையிலே ஒரு இடம் பார்த் திருக்கேன். கிரவுண்டு ஒரு லட்சம் தான். சின்ன இடம்தான். அரை கிரவுண்டுதான். ஐயா தயவு வச்சா நாளைக்குக் கிரயம் பண்ணிடு வேன்.''

''சூசை நீ எல்லை கடந்து பேசறே. இது நல்லதுக்கில்லே. நாளைக்குக் காலையிலே வீட்டுக்கு வா.''

''அப்போ முடிச்சிக்கிறதா எடத்துக்காரன்கிட்டே உறுதியாச் சொல்லி நூத்தி ஒண்ணு அட்வான்ஸ் செஞ்சிடட்டுமா? இந்த நூத்தி ஒண்ணு என் கணக்கா இருக்கட்டும். உங்களைக் கேக்கலை.''

''சூசை'' என்று ஓசை வராமல் பற்களைக் கடித்தார்.

''கூப்பிட்டீங்களாய்யா?''

''என்கிட்டே கைகட்டி வேலை பார்த்த நாயி! என்னையே மிரட்டிப் பார்க்கிறியா?''

''இதென்னங்க வம்பு? மொதலாளியைத் தொழிலாளி மிரட்டறதா? சேச்சே..... நான் ரொம்ப



சாதுங்க. காந்தித் தாத்தா மாதிரி உண்மையைப் பேசறேன்னு சொன்னு, நீங்கதான் வேணுங்கறீங்க. இப்பவும் ஒண்ணும் மோசமில்லே. எதுக்கு உங்களுக்கு என்னால தொந்தரவு? போனை வச்சிட்டுப் பொடி நடையா பக்கத்துல இருக்கிற போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகட்டுமா?''

''முட்டாள்! முதல்ல தூக்குல தொங்கறது நீதாண்டா!''

''தொங்கிட்டுப் போறேன். கட்டபொம்மன் தொங்கலேயா? அட! இந்திரா காந்தியையே வலிக்க, வலிக்கச் சூடா சுடலே? அதையெல்லாம் விடவா என் சாவு 'பிரமாதம்? எனக்கென்ன புள்ளேயா, குட்டியா? ஆனு சின்னம்மாவை நினைச்சா எனக்குக் கவலையா வருது. ரிஸப்ஷன் அன்னைக்குத் தன் புருஷனை விலங்கு போட்டு போலீஸ் அழைச்சுட்டுப் போனு ஒரு புதுப் பெண்டாட்டிக்கு எப்படி இருக்கும்?

''ஆசை, காலேல வீட்டுக்கு வா.''

''அப்போ அந்த மனேயை....''

''நீ வாங்கிக்கலாம். நாளேக்குத்தான் என்னேச் சந்திக்கணும்.''

''உத்தரவு கொடுத்தப்புறம் விவகாரம் பண்ணமாட்டான் ஆசை. நாளேக்கு எத்தனே மணிக்கு வரட்டும்?''

''காலேல எட்டு மணிக்குள்ள வா.''

''வர்றேன். இன்னெரு சின்ன சமாசாரம். சில்லறை நோட்டு வேணும். நூறு ரூபாய் நோட்டா இருந்தா சௌகரியம்.''

நாகராஜன் பதில் சொல்லாமல் படக்கென்று ரிசீவரை வைத்தார். கோட் பாக்கெட்டில் இருந்து கர்ச்சீப் எடுத்து முகத்தை, கழுத்தை துடைத்துக் கொண்டு இன்டர்காமில் மானேஜரை அழைத்துவிட்டு, செக் புத்தகம் எடுத்து வைத்துக் கொண்டு மின் விசிறியைச் சிந்தனையுடன் பார்த்தார்.

கதவைத் தட்டிவிட்டு உள்ளே வந்த கண்ணுடி அணிந்த, டை கட்டின மானேஜரின் முன்னந்தலே பிரகாசமாய் இருந்தது.

''உக்காருங்க மதியழகன்.''

உட்கார்ந்த மதியழகன் காத்திருந்தார்.

''என்ன ஆச்சு?''

''எது சார்?''

''எலெக்ஷன் விவகாரம்தான். தசரதன் வழிக்கு வந்துட்டானு?''

''இல்லே சார். காலேல நாமினேஷன் கொடுத்திருக்கான்.''

''அப்படியா? புரொடக்ஷனேக் கூப்பிட்டு உடனடியா அவனே என்னே வந்து பார்க்கச் சொல்லுங்க. நான் பேசிக்கிறேன்.''

''சரி சார்.''

அவர் சென்றதும் பிரைவேட் போனே எடுத்தார்.

''ஹலோ மாயா, பியூட்டி பார்லர் போகணும்னு சொன்னே, புறப்படலே?''

''புறப்பட்டுக்கிட்டே இருந்தேன். உங்க போன்....''

''மாயா, மத்தியானம் லஞ்சுக்கு வர்றேன்னு சொன்னேன். வர முடியாது போலிருக்கு. இங்கே ஒரு சிக்கல். யூனியன் எலெக்ஷன் வருது. நமக்குப் பிடிக்காத ஆளு வந்துடுவான் போலிருக்கு. அதைத் தடுத்தாகணும். நான் இருந்து நடத்தணும் அதை. ஸாரிம்மா.....''

''சரி, பரவாயில்லே, எப்ப வருவீங்க? எப்போ ஹோட்டலுக்குப் போறோம்?''

''சரியா நாலு மணிக்கு அங்கே இருப்பேன். அஞ்சு மணிக்கு ரிஸப்ஷன் ஹால்ல இருப்போம். ஓக்கே? — 'சரி' என்ருள்.

''கணேசனுக்கு டிரைவிங் தெரியும். வேணுமின்னு அழைச்சுட்டுப் போ.''

''வேணுங்க. நான் நல்லாவே ஓட்டுவேன்.''

''ஓக்கே. மத்தியானம் மறுபடி போன் செய்யறேன்.''

போனே வைத்துவிட்டு எழுந்து கண்ணுடிச் சுவர் அருகே வந்து, குமிழை இழுத்துத் திரையைக் கொஞ்சமாக விலக்கி ஆஸ்பெஸ்டாஸ் கொண்டையிட்ட மில் கட்டிடங்களேப் பார்த்தார். கோடவுன் தெரிந்தது. வாசலில் இரண்டு லாரிகள் நிற்க.... சாக்குத் துணியில் கட்டின பண்டில்கள் ஏற்றப்பட்டுக் கொண்டிருந்தன. தொழிலாளர்களின் சைக்கிள் ஷெட்டில் நெருக்கமாக சைக்கிள்கள். அங்கங்கே வேப்ப மரங்கள். பிரைவேட் தார் ரோடு முக்கிய சாலேயை இடுப்பில் விசாரித்துக் கொண்டிருந்தது.

கதவு தட்டப்பட்டு, உள்ளே வந்தான் தசரதன். உதட்டருகில் பிளாஸ்திரி ஒட்டியிருந்தான். முழங்கை அருகே சின்னதாய் ஒரு பாண்டேஜ். காக்கி யூனிஃபார்மில் இருந்தான். சட்டையின் பாக்கெட் பகுதியில் **R.T.** என்று சிகப்பில் எம்பிராய்டரி எழுத்துக்கள்.

''வரச் சொன்னீங்களாமே சார்.''

நாகராஜன் திரையை முன்போல் இழுத்து விட்டுவிட்டு, அவனே முழுமையாய் ஒருதரம் பார்த்துவிட்டுச் சுற்றி வந்து தனது சுழல் நாற்காலியில் அமர்ந்து கொண்டு, ''உக்காருப்பா. இதென்ன காயம்? மெஷின்லே அடி பட்டுடுச்சா?'' என்ருர்.

''இல்லே. நேத்து செகண்ட் ஷிப்ட் முடிஞ்சி வீட்டுக்குத் திரும்பினப்போ அடையாளம் தெரியாத ரெண்டு பேர் என்னைத் தாக்கினாங்க. பெரிய காயமா ஆகாமல் இலேசா தட்டச் சொல்லித்தான் அவங்களுக்கு உத்தரவு போலிருக்கு.''

''உத்தரவா? உனக்கு யாருப்பா ஆள் வச்சி அடிக்கிற அளவுக்குப் பகை?''

தசரதன் பதில் சொல்லாமல் அவரை நேராய் முறைத்துவிட்டு, ''எதுக்கு வரச் சொன்னீங்க?'' என்றான்.

''உக்காருப்பா.''

''பரவாயில்லே. நிக்கிறேன்.''

''யூனியன் எலெக்ஷன்ல நிக்கிறதா கேள்விப்பட்டேன்.''

''இப்பத்தான் மனு கொடுத்தேன்.''

''சந்தோஷம். நாளைக்குச் சாயங்காலம் வரைக்கும் டைம் இருக்குப்பா உனக்கு.''

''எதுக்கு?''

''மனுவை வாபஸ் வாங்கிக்க.''

''அப்படி எனக்கு அபிப்ராயம் இல்லே.''

''நான் சில விஷயங்கள் சொல்றேன். சொன்னதுக்கப்புறம் அபிப்ராயம் வருதான்னு பாரு. வந்தா வாபஸ் வாங்கிக்க. பையன் ப்ளஸ் டூ முடிச்சுட்டான் போலிருக்கே. எனக்கு வருஷா வருஷம் ஒரு என்ஜினியரிங் சீட் கோட்டா உண்டு. இந்த வருஷம் இன்னும் பயன்படுத்தலே. பொண்ணுகூட வளர்ந்துட்டா போலிருக்கு. கல்யாணம்னு நிறைய செலவு ஆகும் தசரதன். இதோ பாரு, இது என் பிரைவேட் அக்கவுண்ட் செக் புக். கையெழுத்துப் போட்டுத் தயாரா வச்சிருக்கேன். சொல்லு. உங்கள்ல ஒரு கல்யாணத்துக்கு எவ்வளவு செலவாகும்?'' என்று பேனாவை எடுத்துத் தயாரானார் நாகராஜன்.

புன்சிரிப்பு மாறாமல் நின்ற தசரதன், ''மன்னிக்கணும் சார், என்னைத் தப்பா கணிச்சிட்டீங்க. ஐ யாம் நாட் ஃபார் சேல். எனக்குச் செய்ய விரும்பற சலுகைகளை எல்லாத் தொழிலாளிங்களுக்கும் செய்ங்க. யூனியனையே கலைச்சிடறோம். ரெண்டு வருஷ போனஸ் பாக்கி இருக்கு. பாதிப் பேருக்கு மேல் நிரந்தரமாக்கப்படாத தொழிலாளர்கள். ஆஃபீஸர்களை கரன்சி எறிஞ்சுக் கைகட்டி நிக்க வைக்கிற மாதிரி எங்களையும் நினைக்கிறது முட்டாள்தனம்.''

''ஏன் சிவப்பு சிவப்பா பேசறே? நான் சொல்றதைக் கேளு.''

''கேக்கறதா இல்லே சார். எலெக்ஷன் முடிஞ்சதும் முறையா உங்களைச் சந்திக்கிறேன். எங்க பிரச்னைகளை எப்படித் தீர்த்துக்கிறதுன்னு திட்டம் நிறைய இருக்கு. வரட்டுமா?''

''இருப்பா. அப்போ முடிவே பண்ணிட்டே. சரி, போ.''

தசரதன் அலட்சியம் சிந்திவிட்டு வெளியே சென்ற சில நிமிடங்கள் கழித்து, ''நல்லசாமியை வரச் சொல்லு'' என்றார் நாகராஜன்.

முதல் ஷிஃப்ட் முடிந்து கசகசத்த காக்கிச் சட்டைகளில் ஊழியர்கள் கேட்டை நோக்கி நடக்க.... தசரதன் சிகரெட் குடித்துக்கொண்டே தன் சைக்கிளைத் தள்ளினான். கூட நடந்தவனிடம் கையை ஆட்டி, ஆட்டிப் பேசிக்கொண்டே நடந்தான்.

வாசலை அடைய.... செக்யூரிட்டி மனிதன் ஒவ்வொருவர் உடைமைகளையும் சோதித்து, உடம்பில் தொட்டுப் பார்த்து அனுப்பிக் கொண்டிருந்தான்.

தசரதன் முறை வர..... தன் சைக்கிளில் மாட்டியிருந்த பையை எடுத்து அவனிடம் தந்துவிட்டு, ''கேன்வாசிங்குக்குப் புதுமையான ஐடியா வச்சிருக்கேன்ப்பா'' என்று சக ஊழியனிடம் சொன்னான்.

முரட்டு மீசை வைத்துத் தலையை ஒட்ட வெட்டியிருந்த அவன், பையை ஆராய்ந்துவிட்டு, சின்ன இரண்டடுக்கு டிபன் கேரியரைத் தூக்கிப் பார்த்து, புருவம் சுருக்கி, கழற்றிப் பார்த்தான்.

கீழ் கிண்ணத்திற்குள் சாதுவாய்ப் படுத்திருந்தது ஜெர்மன் தயாரிப்பான அந்த சிறிய, ஆயிரம் ரூபாய்க்கும் மேலே மதிப்புள்ள கேஜ் மீட்டர்.

''இது.... இது..... எப்படி என் டிபன் கேரியருக்கு வந்திச்சு?'' என்று பதறினான் தசரதன்.

''சொல்லுங்க மதியழகன்'' என்றார் ஒலித்த இன்டர்காமை எடுத்து நாகராஜன்.

''சார், ஒரு முக்கியமான டூலைத் திருடி இருக்கிறதா தசரதனை செக்யூரிட்டில பிடிச்சிருக்காங்க...''

''அடடா! அவனா இப்படி? ச்சே! யாரையுமே நம்ப முடியலையே.... சரி, வழக்கமா என்ன செய்வீங்க?''

''போலீசுக்குப் புகார் கொடுக்கணும். தசரதனுக்கு சஸ்பென்ஷன் ஆர்டர் கொடுக்கணும். போலீஸ் குற்றத்தை உறுதி செஞ்சதும், உங்களை ஏன் டிஸ்மிஸ் செய்யக் கூடா



துன்னு நோட்டீஸ் கொடுக்கணும்.''

''முறைப்படி என்ன செய்யணுமோ, செஞ்சிடுங்க மதியழகன். ஏங்க, ஒரு சின்ன கிளாரிஃபிகேஷன். சஸ்பெண்ட் ஆகி உள்ள ஒரு நபர் தேர்தல்ல நிக்கலாமா?''

''சட்டப்படி வாய்ப்பில்லே சார்.''

''அதான் ஒரு சந்தேகத்துக்குக் கேட்டுக் கிட்டேன். அப்போ நல்லசாமி வந்துடு வான்றீங்க?''

''ஆமாம் சார். தசரதன் போட்டில இல்லேன்னு நிச்சயமா நல்லசாமிதான்.''

''சந்தோஷம். தாமதம் செய்யாம நட வடிக்கைகளை எடுங்க.''

நாகராஜன் அறையை விட்டு வெளியேறி, தயாராய்த் திறந்து வைக்கப்பட்டிருந்த தமது காரின் பின் சீட்டில் அமர்ந்து கொண்டு புறப்பட்டார்.

முன்கேட் அருகே செக்யூரிட்டியின் பூத் துக்குள் அமர்த்தப்பட்டிருந்த தசரதன் விழி கள் சிவந்து காரின் ஜன்னல் வழியாக இவரையே முறைக்க.... பார்வையைத் திருப் பிக் கொண்டு, ஜன்னலின் குளிர்க் கண் ணாடியை ஏற்றி விட்டுக் கொண்டார் நாகராஜன்.

மாயா சாப்பிட்டு முடித்து ஸ்பூன் களைப் போட்டுவிட்டு, மடியில் விரித்திருந்த துணியை எடுத்து நாற்காலி முதுகில் போட்டுவிட்டு, வாஷ் பேசினில் கை கழுவி ஞள்.

கண்ணாடியில் இடம், வலம் மாறியிருந்த சமையல்காரன் சாரதி ஆரஞ்சு ஜூஸ் கொண்டு வந்து மேஜையில் வைக்க....

''சாரதி, ராத்திரிக்கு எதுவும் சமைக்க வேணாம். ரிஸப்ஷன் டின்னர் ஹெவியா இருக்கும். அஞ்சு மணிக்கு நாங்க புறப்பட றோம். வீட்ல நீ இரு. நாங்க திரும்பினதும் வீட்டுக்குப் போகலாம்.''

''சரிங்கம்மா.''

மாயா டைனிங் ஹாலை விட்டு வெளியேறி மணி பார்த்தாள். 2.10. அவர் நான்கு மணிக்குத்தான் வருவதாகச் சொல்லியிருக் கிறார். அதற்குள்.....

மாயா ஹாலில் இருந்த டெலிபோனை அணுகி.....

''முதலாளியைப் பேசச் சொல்லுப்பா'' என்று நகம் கடித்தாள்.

''ஹலோ...''

''சுகுமார், அஞ்சு மணிக்கு நாங்க ஹோட் டலுக்குப் புறப்படறோம்.''

''அப்போ உனக்கு நேரம் நிறைய இருக்கு. கார் இருக்கா தயாரா?''

''இருக்குண்ணா.''

''சரி, உடனே புறப்பட்டு வாயேன்.''

''வொர்க் ஷாப்புக்கா?''

''வேணாம். நம்ம வீட்டுக்கு வந்துடு. நான் வொர்க் ஷாப்பிலேருந்து இப்பவே கிளம்பி வீட்டுக்கு வந்திடறேன்.''

''சரிண்ணா, எல்லா ஏற்பாடும் தயாரா?''

''தயார்தான். எங்கேயிருந்து பேசறே மாயா?''

''வீட்டிலேருந்துதான்.''

''அறிவு இருக்கா உனக்கு?''

''பக்கத்திலே யாரும் இல்லேண்ணே.''

என்று நிமிர்ந்த மாயா அதிர்ந்தாள்.. வாசலில் கால்களை அகற்றி நின்று கொண்டு இவளையே பார்த்துக் கொண்டிருந்தார் நாகராஜன்.

(தொடரும்)

---



நெடுஞ்செழியனுக்கு நினைவூட்டு வோம்!

''நான் ஜெயித்து வந்தால் நிச்சயம் அமைச்சர். அமைச்சராகிவிட்டால் இவர் எங்கே இங்கு வந்து நம்மைச் சந்திக்கப் போகிறார் என்று ஓட்டுப் போடாமல் இருந்து விடாதீர்கள். இந்த ஆத்தூரே சென்னையைப் போல் ஆகிவிடும்!''

— ஆத்தூர் தொகுதியில் போட்டியிட்ட நெடுஞ்செழியன் இப்படிச் சொல்லித்தான் வோட்டு கேட்டார்!

''இவர் சென்னையையே ஆத்தூருக்குக் கொண்டு வருவது இருக்கட்டும். தேர்தல் சமயத்தில் ''வெற்றிபெற்றதும் முதல்வேலையாக ஆஸ்பத்திரி கட்டித் தருவேன்'' என்று வாக் குறுதி கொடுத்தாரே அதையாவது நிறை வேற்றுவாரா?'' என்று கேட்கிறார் சித்தை யன் கோட்டையைச் சேர்ந்த வேல்முருகன். இப்போது அங்கு மருந்தகம்தான் இருக் கிறது.

இந்திரா காங்கிரஸ் துணைத் தலைவர்களில் ஒருவரான சித்தையன் கோட்டை அப்துல் காதரின் சகோதரர் சையது முகமது 1971 லேயே ஆஸ்பத்திரி கட்டுவதற்காக ஐந்து ஏக்கர் நிலத்தை இனமாகக் கொடுத்துவிட் டார். ஊர் மக்களெல்லாம் ஒன்று சேர்ந்து 13,000 ரூபாய் பணமும் கட்டியிருக்கிறார் கள்..ஆனாலும்ஆஸ்பத்திரிவரவில்லை.'என்ன காரணமோ? தெரியவில்லை!' என்று மக்கள் மண்டையைக் குடைந்து கொண்டிருக்கிறார் கள்.

அப்துல் காதரைச் சந்தித்தபோது, ''ஹண்டேயிடம் பேசினேன். ஆஸ்பத்திரிக் குப் பதிலாக ஆரம்பச் சுகாதார நிலையம் அளிக்கப் போவதாகச் சொன்னார்! கூட் டணிக் கட்சியாக இருப்பதால் அடித்துக் கேட்க முடியவில்லை!'' என்றார் அவர்.

# க்ளினிக் ஸ்பெஷல் ஷாம்பூ பொடுகினை எதிர்த்து அகற்றுகிறது. எனவே நீங்கள் அனைவரையும் கவர முடிகிறது.

பொடுகின் காரணமாக எவரையும் கவர முடியாமற் போனால், ஒரு ஸ்பெஷலிஸ்ட் ஷாம்பூவைப் பயன்படுத்தும் வேளை வந்துவிட்டது என்று பொருள். க்ளினிக் ஸ்பெஷல் ஷாம்பூ. இதன் மென்மை நுரை கேசத்தைக் கழுவுகிறது; அடங்கியுள்ள சிறப்புப் பொருள் பொடுகினைக் கட்டுப்படுத்துகிறது. உங்கள் கேசம் அழகு பெறுகிறது. சுத்தமாகவும், ஆரோக்கியமாகவும், அரிப்பற்றும் திகழ்கிறது.




## க்ளினிக் ஸ்பெஷல்

## ஷாம்பூ.

**பொடுகற்ற, சுத்தமான, ஆரோக்கியமிக்க கேசத்திற்கு.**

HLL-2607

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமிக்க தயாரிப்பு.

## நெஞ்சில் பாதி...., பாதி....

மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழாரை, மிகவும் பக்குவமாகத் தலைநகராம் கங்கை கொண்ட சோழபுரத்துக்குக் கொண்டு வந்துவிட்டார்கள்.

அவ்வாறு கொண்டு வருகையில் வழி நெடுக மக்கள் நின்று கரம்கூப்பி இறைவனை வேண்டிக் கொண்ட காட்சியும், அவரை வாழ்த்தி எழுப்பிய கூக்குரலும், அழுகுரலும் இன்னமும் சோழமாமன்னன் குலோத்துங்கன் நெஞ்சில் ஓவியமாய்ப் படர்ந்து கொண்டிருந்தது. முதலமைச்சர் என்பது வேறு; மக்கள் மனத்தில் குடி கொள்வது என்பது வேறு!

அன்பே உருவான முதலமைச்சருக்கு இப்படித் தீங்கு செய்பவர்களும் இருக்கிறார்களா என்று பொருமிக் கொண்டனர்.

தலைநகரில் மக்கள் திரண்டு வந்து முதலமைச்சரைப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்; அடம் பிடிக்கவும் செய்தனர்.

அநபாயன் குலோத்துங்க சோழ மாமன்னனே நேரில் சென்று மக்களனைவருக்கும் தினம் தினம் ஆறுதல் சொன்னான்.

முதலமைச்சருக்குத் தேவை இப்போது நல்ல ஓய்வு; விரைவில் பூரண குணமடைந்து உங்கள்முன் காட்சி தருவார்; அதுவரை நீங்கள் அமைதியாக இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டதுடன் பறையறிவிக்கவும் உத்தரவிட்டான். இல்லையென்றால், தினமும் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து அரண்மனையில் வேலை பார்க்க விடமாட்டார்களே!

ஆங்காங்கே மண்டலாதிபதிகளும், வாரியத் தலைவர்களும், நாடுகாப்போரும், மகாசபையாரும் இதுபற்றியதில் அதிக சிரத்தை எடுத்துக் கொண்டு மக்களை அரண்மனை நோக்கிச் செல்லாவண்ணம் கவனித்துக் கொண்டனர்.

சேக்கிழாருக்கு இருக்கும் மக்கள் பெருமை கண்டு பூரித்துப் போனவள் ஜோதி; பொறுமை கொண்டுவிட்டவர் ஒட்டக்கூத்தர். தம்பி பாலறுவாயனை, மகனைப் பார்க்க வந்த அன்னைக்கு ஆறுதல் கூறி குன்றத்தூர் நோக்கி அழைத்துச் சென்றிருந்தான்.

சேக்கிழார் மாளிகையில் பலத்த காவல். ஓர் ஈ செல்வதானாலும் அதன் இறக்கையில் புலி முத்திரை இருக்க வேண்டும். அப்படியான கடுமையான உத்தரவு.

எவர் எதைப் பேசிக் கொண்டாலும் கவலையில்லை என்பது போல ஜோதி அங்கேயே இரவும் பகலுமாய்ச் சேவை புரிகிறாள்; அவளுக்குத் துணையாக அமைச்சர் பவானி பாடுபட்டாள். எப்பேர்ப்பட்ட அமைச்சர் பதவியைத் தூக்கித் தந்த எம்பெருமானல்லவா சேக்கிழார்?



அன்றைக்குப் பௌர்ணமி.

ஒட்டக்கூத்தருக்கு உகந்த நாள்.

குடந்தையிலிருந்து சுஜாதை பகலுக்கு மேல் வந்து விடுவாள். ஆனால் ஏனோ ஒட்டக்கூத்தரின் உள்மனம் காரணமில்லாமல் ஜோதியின்பால் மோதியது.

தில்லையில் அவள் ஆடிய ஆடல் பற்றிப் பலர் பலவிதமாகப் புகழக் கேட்க, அந்த ஆட்டத்தையாவது நாம் நேரில் காணச் சென்றிருக்கலாமே என்று எண்ணமிட்டார்.

அரம்பையின் நடனமென்பார்களே, அது வெறும் கற்பனை. இது கண்கூடு என்கிறார்களே....!

ஆ! ஒருமுறை நாமும் ஜோதியின் நடனத்தைப் பார்க்க வேண்டுமே!

இப்போது அது முடிகிற காரியமே அல்ல! சேக்கிழார் பிழைத்து எழுந்து வந்தால் தானே?

ஜோதியின் அழகுப் பேரொளி ஒட்டக்கூத்தர் சிந்தனையில் விசுவ ரூபமாய்த் தெரிகிறது.

இவளது காதல் விவகாரம் பற்றி நாமறிந்தது ஒன்று: இப்போது பேசப்படுவது மற்றொன்றாக இருக்கிறதே!

ஒருவேளை குலோத்துங்கன் ஜோதியிடம் கொண்டது ஒருதலைக் காதலாக இருக்குமோ?

ஜோதியின் வேல்விழிகள் சேக்கிழாரைத் திருமுழுக்காட்டுகின்றன என்பதாகவல்லவா சொல்லுகிறார்கள்!

ஆடிய ஆட்டமும் பாட்டும்,



இப்போது சேக்கிழார் மூச்சே தனது பேச்சாகக் கொண்டிருப்பது....

சேக்கிழாரைக் கவனிக்க ஆயிரம் பேர் இங்கிருக்க, இவளுக்குமட்டும்வந்த அக்கறை என்ன?

இப்போது அவள் சேக்கிழார் மாளிகையில்தானிருப்பாள். சென்று பார்த்துவிட்டுத் திரும்பலாமே! அப்படியே சேக்கிழாரையும் கூத்தர் அடிக்கடி வந்து கவனித்துக் கொள்கிறார் என்கிற பெயரும் நிலவட்டும்!

இது ஒரு நாடி பார்க்கும் பிரவேசமாக இருக்கட்டுமே! செல்வதுதான் செல்கிறோம்; குலோத்துங்கனோடு சென்றால் என்ன? குறிப்பறிய இது ஒரு சந்தர்ப்பமாக இருக்குமல்லவா?

சோழ மாமன்னருக்குச் செய்தி போக்கிவிட்டுத் தன்னையலங்கரித்துக் கொள்கிறார் ஒட்டக்கூத்தர்.

சற்றைக்கெல்லாம் அரண்மனைக்குச் சென்ற பணியாளன் செய்தி கொண்டு வந்தான்.

சோழ மாமன்னர் காலையிலேயே சென்று பார்த்துவிட்டுத் திரும்பிவிட்டாராம்!

பார்த்தால் என்ன? மீண்டும் தன்னோடு வந்து பார்ப்பதற்கென்ன? அங்கேதான் ஜோதி தரிசனமிருக்கிறதே!

ஒட்டக்கூத்தர் பல்லக்கில் அமர்ந்து புறப்பட்டார்.

அப்போதுதான் அந்தச் செய்தி வந்தது.

சேக்கிழார் உடல்நிலை குணமாகச் சோழ பேரரசுக்குட்பட்ட அனைத்துக் கோயில்களிலும் வருகிற ரேவதி நட்சத்திரத்தில் யாகங்களும் பிரார்த்தனைகளும் நடைபெற வேண்டும். பிரசாதங்கள் வரவேண்டும் என்பதே அச்செய்தி.

ஒட்டக்கூத்தர் பல்லக்கு சேக்கிழார் மாளிகையை அடைந்தது.

அவைக்குரவர் வந்திருக்கிறார் என்கிற செய்தியறிந்து மாளிகையில் இருந்த வீரர்கள் அனைவரும் வணங்கி வரவேற்கிறார்கள்.

ஜோதியே வெளியே ஓடி வந்து வரவேற்க மாட்டாளா என்கிற எதிர்பார்ப்பு ஒட்டக்கூத்தருக்கு இருக்கத்தான் செய்தது. ஆனால் வெளியே வந்து வரவேற்றவள் பட்டீச்சுர பவானி.

''வாருங்கள் புலவர் பெருமானே!''

ஒட்டக்கூத்தர் அண்ணாந்து கவனிக்கிறார். ஓ..... கறுப்பு முல்லையா? இதுவும் நன்றாகத்தான் மணக்கிறது!

''பவானி! உன்னிடம் சில விஷயங்கள் குறித்துப் பேச வேண்டும். நான் புறப்பட்டதும் என்னைப் பின்தொடர்ந்து வருகிறாய்!''

ஏனிந்த அழைப்பு?

பவானி சொன்னாள்: "இன்று பௌர்ணமி சுவாமி!''

தூக்கிவாரிப் போட்டுவிட்டது ஒட்டக்கூத்தருக்கு!

"அதனால் என்ன பவானி! நீ அமாவாசையாய் இருப்பதால் பௌர்ணமியைக் கண்டு பயப்படத் தேவையில்லை, வரலாம்!''

ஒட்டக்கூத்தராயிற்றே!



## அருள்வாக்கு

தியாகையர்வாள் சர்போஜி ராஜா கூப்பிட்டபோது, "ராஜாவுடைய நிதி ஸௌக்யம் தருமா? ராமனுடைய ஸந்நிதி ஸௌக்யம் தருமா?" என்று பாடினதை எல்லாரும் கொண்டாடிச் சொல்கிறோம். இப்படியே இன்னும் அநேக மஹான்களும் ஈச்வரனைத் தவிர ராஜா, கீஜா யாரைப் பற்றியும் பாடுவதில்லை என்று தங்கள் அபிப்ராயத்தை வெளியிட்டுச் சொல்லியிருக்கிறார்கள்.

"வாய் கொண்டு மானிடம் பாட வந்த
கவியேன் அல்லேன்"

என்று நம்மாழ்வார் சொல்லியிருக்கிறார்.

புலவர்களையெல்லாம் பார்த்து ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகள், "அவனையும் இவனையும் எதற்காகப் பாடுகிறீர்கள்? சிவனையே பாடுங்கள்" என்று அறிவுறுத்தி ஒரு முழுப் பதிகமே பாடியிருக்கிறார். "கொடுக்கிலாதானை" ஏன் வள்ளல் என்று புகழ வேண்டும் என்று கேட்டிருக்கிறார்.

சைவத்தை அப்பர் ஸ்வாமிகள் பரப்புகிறாரே என்று கோபம் கொண்டு, அப்போது ஜைன மதத்திலிருந்த மஹேந்தர வர்ம பல்லவன் அவரைத் தண்டிப்பதற்காக ஆளனுப்பியபோது அவர் "நாமார்க்கும் குடியல்லோம்" பாடியதைவிட மஹான்களான கவிகளின் தீரத்துக்கு த்ருஷ்டாந்தம் இல்லை.

பக்தி ஞானங்கள் போலவே பாண்டித்யத்திலும் சிறந்து விளங்கிய வேறே பல மஹான்களும் ராஜாவின் ஆஸ்தான வித்வானாயிருப்பதை த்ருண மாத்ரமாக உதறியிருக்கிறார்கள்.

மஹான்கள் வைராக்கியத்தின் மேல் ராஜ கௌரவத்தைப் புறக்கணித்தார்கள். கவிகளாகவே இருந்தவர்கள் மான உணர்ச்சியின்மேல் இப்படிப் பண்ணியிருக்கிறார்கள். என்ன அவமானம் வேண்டுமானாலும் பட்டுக் கொண்டு ஆஸ்தான கவி என்ற பெரிய பெயரில் இருந்துவிட்டால் போதும் என்று புகழ், ஸன்மானம் முதலியவற்றுக்காக மானத்தை விட்டால் அது ரொம்பவும் குறைவு. அப்படியில்லாமல் தீரத்துடன் துணிச்சலுடன் 'இன்டிபென்டென்'டாக (ஸ்வதந்திரமாக) ஒரு கவி இருந்தானென்றால் அதை, அவனுடைய நிலையை வைத்துப் பார்க்கும்போது விசேஷமாகப் போற்றிக் கொண்டாடத்தான் வேண்டும். நாம் இருக்கிற நிலையில் நாமும் ஸ்வய லாபத்துக்காக மானத்தை விடாமல் அவர்களைப் போலத்தான் இருக்கணும் என்று பாடம் பெற வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

கற்பனையை ஓடி வா என்று கூப்பிட வேண்டும். அதுவாகவே தேடி வருமே?

ஒட்டக்கூத்தர் உள்ளே நுழைய, பின்னே பவானி சென்றான்.

அறையினுள் பிரவேசிக்கிறார்.

அப்போதுதான் ஜோதி எழுந்து நின்று கரம் கூப்பி வரவேற்கிறாள். ஒட்டக்கூத்தரென்றால் தமிழுலகம் ஒடுங்கி நடுங்குமே!

ஜோதியை உற்றுப் பரிசீலிக்கிறார் ஒட்டக்கூத்தர்.

ஓ.... அழகின் கனியமுது! அணிப் பொற்சித்திரம்! கலையின் கவியழகு! கானகத்து மயிலழகு! மான் விழியழகு! தேன் மொழியழகு!

"ஜோதி! பாதியாக இளைத்துவிட்டாயே!" என்றார் ஒட்டக்கூத்தர்.

"மிஞ்சி இருப்பது பாதி வாழ்க்கைதானே எனக்கு, புலவர் பெம்மானே!"

"ஏன்? பாதி எங்கு போயிற்று?"

"மாண்புமிகு முதலமைச்சர் நெஞ்சில் போயிற்று!"

ஆ, இவளிடம் அதிகம் பேசக்கூடாது. சொல்லைக் குறுவாளாக்கித் தனது நெஞ்சில் பாய்ச்சுகிறாள்!

"மறு பாதியும் தயங்குவானேன்?"

"உங்களைப் போன்றோர் கேட்டால் மறுமொழி சொல்ல வேண்டாமா?"

"நல்லவேளை! குலோத்துங்கன் நெஞ்சிலிருக்கிறது என்று சொல்லாமல் போய் விட்டாயே!"

"இல்லை; அது எனது நெஞ்சில் இருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே அங்கு வந்து நின்றான் கபாலீச்சுரன்.

உற்றுப் பரிசீலிக்கிறார் ஒட்டக்கூத்தர். ஓ... இவன்தான் நாம் கேள்விப்பட்ட கபாலீச்சுரனோ? ஜோதியின் காதல் ஜோதிக்கு ஆனானவனோ? என்ன அசிங்கம்!

"நீதான் கபாலீச்சுரன், இல்லையா?"

"இல்லை."

விழிகளை மலர்த்தி வினாக்குறியுடன் கவனிக்கிறார் ஒட்டக்கூத்தர்.

"அந்த வேஷத்தில் இருப்பவன்; கலைத்துவிட மனமில்லாமல் இருப்பவன். ஏனென்றால் காதல் வயப்பட்டுவிட்டேனே?"

அமைதியாய் நோக்கிய ஒட்டக்கூத்தர், ஜோதியின் பக்கம் திரும்புகிறார்.

"ஜோதி! அமைச்சருக்கு இப்போது எப்படி இருக்கிறது?"

"எந்தவித முன்னேற்றமும் இன்னமும் தெரியவில்லைஎன்கிறார்மருத்துவர்.நெஞ்சில் சீழ் வைத்துவிட்டது. காலையில்தான் களிம்பிட்டு, எரிச்சலைத் தாங்கிக் கொள்ள மயக்க மூலிகை தந்துவிட்டுச் சென்றிருக்கிறார்."



# வெள்ளி சந்தனப்பேலா பரிசு!

லஞ்ச் டைம் நாடகத் தொடரை எழுதிய ஆறு எழுத்தாளர்களை வரிசைப் படுத்துமாறு கோரியிருந்தோம்.

சரியான விடை:

**1, 2: கி. ராஜேந்திரன்**
**3, 4: ஜே. எஸ். ராகவன்**
**5, 6: முகுந்தன்**
**7, 8: சாருகேசி**
**9, 10: கோவை அனுராதா**
**11, 12: மெரீனா.**

ஒரு தவறு கூட இல்லாமல் விடைகளை எழுதிய இருவரும் ஆளுக்கு ஒரு சந்தனப் பேலா பரிசு பெறுகின்றனர்:

1. கனகா சீனிவாசன்,
58.— A, பெரியார் நகர்,
திருவொற்றியூர்,
சென்னை — 19.

2. வி. மாணிக்கம்,
34 — A, தனியூர் சாலிய தெரு.
கொரநாடு,
மயிலாடுதுறை — 2.

ஆறுதல் பரிசுகள் பெறுவோர் பட்டியல் அடுத்த இதழில்.

ஒத்துழைப்பு அளித்த எழுத்தாளர்களுக்கு நன்றி.

''பயப்பட வேண்டாம்; சேக்கிழார் பிழைத்துக் கொள்வார்!''

ஜோதி கரம்கூப்பி வணங்கினாள். ''சரஸ்வதி கடாட்சம் பெற்ற சான்றோராகிய தங்கள் வாயிலிருந்து இந்தச் சொற்கள் வந்த பிறகு....''

''நெஞ்சுள் புகுந்திருக்கும் பாதி வாழ்க்கை வெளியில் வந்த மாதிரி என்கிறாயா?''

கூத்தர் சொன்ன அடுத்தகணம் கொஞ்சமும் யோசியாத ஜோதி: ''இல்லை; முழுதுமாக நெஞ்சில் நுழைத்து ரணத்தை ஆற்றி விடுவேன்.''

''பிறகு நீ?''

''அவர்!''

''அவர்?''

''தமிழ்!''

''தமிழ் அவரிடம் மட்டுமே இருப்பதாக நினைக்கிறாயா?''

''இரண்டு கருத்துக்கு இடமே இல்லை.''

எரிச்சலோடு நோக்கிய ஒட்டக்கூத்தர், மருண்டு பார்க்காமல் ஜோதியைப் புரண்டு பார்க்கிறார். இதுதமிழ்த்தாகத்தால்சொல்கிற விமர்சனமல்ல; தமிழ் மோகத்தால் கூறுகிற விமர்சனம். சுஜாதை சொல்லவில்லையா? ஒட்டக்கூத்தருக்குமுன் எந்தப் புலவனும் மொட்டைக் கூத்தனென்று! மனத்தே சிறிது ஆறுதல்.

அவர் புறப்பட்டார்.

பவானியை நோக்கி, ''பவானி! நீ மருத்துவர் இல்லம் சென்று, சேக்கிழாரைக் கவனமாகக் கவனிக்க வேண்டும் என்று நான் சொன்னதாகச் சொல்லுகிறாய். அத்துடன், சேக்கிழாரைப் பற்றி மருத்துவர் என்ன நினைக்கிறார் என்கிற சரியான குண நலனை விசாரித்துக் கொண்டு என்னிடம் வந்து கூறி விட்ட பிறகு ஏனைய செயல்களைக் கவனிக்கிறாய்.''

பவானி மௌனமாய் நிற்கிறாள்.

''என்ன நான் சொல்கிறேன்; நீ சிலையாக நின்றால்?''

''சம்மதம் என்று பொருள் தமிழ்ப் பெருமானே!''

சம்மதம்....! சொல்லை உணர்ந்து பெய்து இருக்கிறாளோ பவானி?

ஜோதியைப் புரண்டு பார்த்தவர் இங்கே மருண்டு பார்க்கிறார்! அடுத்து கபாலீச்சுரனை நோக்குகிறார். ''கபாலீச்சுரா! நீ என்னைப் பின்தொடருகிறாய்! வழியில் உன்னிடம் சில செய்திகள் குறித்து விவாதிக்க வேண்டும்!''

கபாலீச்சுரனும் சிலையாக நிற்கிறான்.

''நீயும் பவானி போலச் சிலையாக நின்றால்?''

ஜோதி இப்போது மறுமொழி பகர்ந்தாள். ''ஒட்டக்கூத்தர் பெருமானே! பவானி அமைச்சர்! உங்கள் சொல்லுக்குக் கட்டுப் படலாம். ஏனென்றால் நீங்கள் மன்னரிடம் மிகுந்த செல்வாக்குடைய அரசவைக் கவிஞர். ஆனால் நானோ, என் காதலரோ உங்கள் சொல்லுக்குக் கட்டுப்பட வேண்டும் என்பது என்ன அவசியம்?''

காதலன்....

ஜோதியின் மறுமொழி கூத்தரின், கண்களைக் கோபத்தில் பரபரக்கச் செய்தது; துடிதுடிக்கச் செய்தது.

(தொடரும்)

# பல சரக்கு

நம்ப முடியவில்லை! உமையாள்புரம் சிவராமனுக்கு இப்போதுதான் கிருஷ்ண கான சபை சங்கீத சூடாமணி பட்டம் வழங்குகிறது என்பதே ஆச்சரியம்தான். ஏனென்றால் ஆற்றல் மிக்க கலைஞர்களைத் தேடிப் பிடித்து அவர்களுக்கு வயது ஏறக் காத்திராமல், முன்கூட்டியே விருது அளித்துப் பாராட்டி அவர்கள் மேலும் வாழ்க்கையில் உயர உதவுவதையே கி. கா. சபை நோக்கமாகக் கொண்டிருக்கிறது. சிவராமன் விஷயம் விதிவிலக்காக அமைந்து பொதுவான நடைமுறைக்கு அச்சாரமாகியிருக்கலாம்.



• சிவராமனுக்குச் சூடாமணி

அல்லது ஒருவேளை சிவராமனின் வாசிப்பு என்றும் இளமை மாறாதது என்பதால் அவருக்கு விருது வழங்குவதைத் தள்ளிப் போட்டிருக்கலாம்.

கர்நாடக சங்கீதத்தின் உயர்வைப் பற்றியோ சிவராமனின் ஆற்றலைப் பற்றியோ புதிதாக என்ன சொல்ல இருக்கிறது? இந்தக் கஷ்டத்தை அன்று பேசியவர்களும் உணர்ந்ததாகவே தோன்றியது. ஆனால், "சிவராமன் வாசிப்பது லய வாத்தியமானாலும் அதில் அவர் இசையே எழுப்புகிறார்" என்று நீதிபதி மோகன் கூறியது வித்தியாசமாகவும் உண்மையான புதிய கருத்தாகவும் இருந்தது. அதை உறுதிப்படுத்துவது போலிருந்தது மகாராஜபுரம் சந்தானம் கூறிய ஒரு விஷயம். "கச்சேரியில் அவர் நம்மோடு சேர்ந்து வாசிக்கும் போது கூட நம்மால் முழுவதுமாக அவர் சிறப்பை உணர முடிவதில்லை; அப்புறமாக டேப்பைப் போட்டுக் கேட்கும்போதுதான் 'அடடா! நம்முடைய ஒவ்வொரு சங்கதிக்குக் கூட அல்லவா வாசித்திருக்கிறார்' என்று பிரமித்துப் போகிறோம்" என்றார்.

விருது வழங்கிய செம்மங்குடிக்கு அன்று கிருஷ்ண கான சபை ஒரு சந்தனக் கைத்தடியைப் பரிசாக அளித்தது. அவருக்கு வயதாகிவிட்டாலும் அவர் சங்கீதம் என்றும் நம் மனங்களில் மணத்துக் கொண்டே இருப்பதை உணர்த்தவோ?



• வித்தியாச அருணன்



• சங்கரா லாட்டரி!

பெரும் புகழ்பெற்ற கனரக எழுத்தாளர்கள், பெரிய மனிதர்கள், அரசியலில் முக்கியப் புள்ளிகள் முதலியோர் எழுதிய நூல்களுக்கு வெளியீட்டு விழா நடக்கும்; பார்த்திருக்கிறோம். அங்கேயே விசேஷத் தள்ளுபடி என்று அறிவித்துக் கணிசமான பிரதிகளைத் தள்ளிவிட்டு விடுவார்கள். ஆனால் அருணோதயம் அருணன் வித்தியாச

• வினை 'லவ் ஆங்கிள்!'



மான காரியம் செய்தார். பிரபலமான ஆனல் இளம் எழுத்தாளர்களாகத் தேடிப் பிடித்து அவர்களின் நூல்களை வெளியிடப் பெரிய பெரிய புள்ளிகளை அழைத்து வந்து விழா நடத்தினர். அனுராதா ரமணன், ராஜேஷ்குமார், ராஜேந்திர குமார், சுபா ஆகியோரின் நூல்கள் வெளியிடப்பட்டன. இன்றைய எழுத்திலே ஆபாசம் புகுந்து விட்டதற்குக் கண்டனக் குரல்கள் நிறையவே எழுந்தன. அதில் அதிகமாகச் சிக்கிக் கொண்டு 'பே' என்று விழித்தவர் ராஜேந்திரகுமார்தான். அடியார் அவர் சார்பில் வாதாடியது கூடச் சற்று பலவீனமாகவே ஒலித்தது. ஒரு பரிதாபம் என்னவெனில் அன்று வெளியிடப்பட்ட ராஜேந்திர குமாரின் நூல் அவர் எழுதியவற்றுள் தரமான ஒன்று. ஆபாசக் கலப்பற்றது. "கொஞ்சும் சலங்கை" என்ற தலைப்பு கொண்ட அந்தப் புத்தகம் பற்றி யாரும் ஒன்றும் கூறவில்லை!

ஒரு நல்ல கதைக் கரு சரியான நாடக அமைப்பு இல்லாததால் முழுமையாகச் சோபிக்க முடியாமல் போகும் என்பதற்குக் கல்கிதாசன் எழுதிய அம்பிகையின் கல்யாணம் ஒரு சான்று.

நாடகத்தில் ஒரு அருமையான கோயில் செட் வருகிறது. ஆனல் அது ஒரே ஒரு காட்சியில் மட்டுமே பயனுகிறது.

ஒரு நயமான, வித்தியாசமான காதல் கோணம் இருக்கிறது. ஆனல் இதுவும் சரியாக உபயோகப்படுத்தப்படாமல் பின்னணிக்குத் தள்ளப்பட்டு விட்டது.

திரும்பத் திரும்ப ஒரே விஷயம் — கோயிலுக்கு வந்து சேர வேண்டிய குத்தகை பாக்கி வரவில்லை என்ற ஒரு விஷயமே — வசனத்தில் முக்கியத்துவம் பெற்று முன் பாதி நாடகத்தில் நம்மைச் 'சூள்' கொட்ட வைத்து விடுகிறது.

ஆனலும் இந்தக் குறைபாடுகளை இட்டு நிரப்புகிற மாதிரி நாடகக் குழுவில் ஒவ்வொருவரும் நன்கு தேர்ந்த நடிப்புத் திறனை வெளிப்படுத்துகின்றனர். ஜோக் தோரணமாக இராமல் ஆழ்ந்த கதை அம்சம், சமுதாயப் பார்வையுடன் கூடிய அழுத்தமான வசனங்கள் எல்லாம் இருக்கின்றன. கே.எஸ்.நாகராஜனின் டைரக்ஷன் திறமை அங்கங்கே பளிச்சிடுகிறது.

கொஞ்சம் திருத்தி அமைத்தால் 'ஓகோகோ' என்று பேர் வாங்கக் கூடிய சக்தியை உள்ளடக்கிய நாடகம் இது.

'வரதட்சிணை வாங்கிக் கொண்டு திருமணம் பண்ணுகிறவர்கள் கல்யாணப் பத்திரிகையில் என் பெயரைப் போடாதீர்கள்' என்று சொல்பவர் காஞ்சிமுனிவர். அப்படிப்பட்டவரா பம்பர் லாட்டரி திட்டத்துக்கு ஆசி வழங்குவார்? பத்திரிகை விளம்பரங்களைப் பார்த்ததும் நம் புருவங்கள் உயரத்தான் செய்தன.

லாட்டரி நடத்தப்படுகிற நோக்கம், சங்கரா மெடிகல் டிரஸ்ட் மூலமாய்ச் சென்னையில் பம்மலிலும், ஆந்திராவில் சித்தூரிலும் இரண்டு ஆஸ்பத்திரிகள் கட்டுவதுதான். ஆஸ்பத்திரி கட்டும் நோக்கம் மேன்மையானது என்றாலும் லாட்டரி நடத்தி — அதுவும் சங்கரர் பெயரில் நடத்திப் பணம் திரட்ட வேண்டுமா என்பதுதான் கேள்வி.

சங்கரா டிரஸ்டின் தலைவரான வேங்கட சுப்பிரமணியத்திடம் பேசியதிலிருந்து டிரஸ்டுக்கு லாட்டரி நடத்திப் பணம் திரட்டுவதில் உடன்பாடில்லை என்று தெரிகிறது. ஆனலும் அவர்கள் எப்படிச் சம்மதித்தார்கள் என்பது புதிர்தான்.

காஞ்சிபுரம் சென்று சங்கர மடம் நிர்வாகத்தினரிடம் விசாரித்தோம். அவர்கள், "இங்கே லாட்டரிச் சீட்டு நடத்த பெரியவாள் யாருக்கும் ஆசீர்வாதம் தரவில்லை. பேப்பரில் பார்த்துத்தான் எங்களுக்கே விஷயம் தெரியும். பேப்பர் கட்டிங்கைச் சின்னவாளுக்குக் கூட (ஜெயேந்திரர்) தபாலில் அனுப்பியிருக்கிறோம்" என்று சொல்லிவிட்டனர்.

லாட்டரியை நடத்தும் கே. ஏ. எஸ். சேகர் தரப்பில் விசாரித்தபோது, "ஏழை ஜனங்களுக்கு மருத்துவ உதவி செய்ய சங்கரா டிரஸ்ட் ஆரம்பித்த போது பெரியவர் ஆசீர்வதித்தார்கள். அந்த டிரஸ்ட் நிதிக்காகத்தான் இப்போது லாட்டரி நடத்தப்படுகிறது. எனவே 'சங்கராச்சாரியார் ஆசி பெற்ற சங்கரா மெடிகல் டிரஸ்ட் நிதிக்காக' என்று விளம்பரப்படுத்தியுள்ளோம். லாட்டரியே பெரியவர் ஆசீர்வாதம் பெற்றது என்று விளம்பரப்படுத்தவில்லையே!" என்று சமாதானம் சொன்னர்கள். ஆனல் விளம்பரம் என்னவோ (குறிப்பாகத் தமிழ் விளம்பரம்) லாட்டரிக்கே ஆசார்யாள் ஆசி அளித்தது போலத்தான் தொனிக்கிறது.

— நமது நிருபர்கள்

## ரூ 2000 பெறுமானமுள்ள பரிசுகள் ஞாபகமிருக்கிறதா?

ஸ்வர ராக சுதா டீ. வி. நிகழ்ச்சி பற்றிய ஒரு பக்க விமர்சனக் கட்டுரைப் போட்டி.

முடிவு தேதி: செப்டம்பர் 11 உ

முதல் பரிசு: பாலமுரளிகிருஷ்ண வழங்கும் டு இன் ஒன் ரேடியோ கேஸட் டேப் ரிகார்டர்.

மற்றும் பல ஆறுதல் பரிசுகள்

## அனுராதா ரமணன் 19



"நந்தா!"

இன்பா, தனது வலது காலைத் தூக்கி, இடதுகால் தொடை மீது வைத்து, சின்ன நகவெட்டியினால், கால் கட்டை விரல் நகத்தை வெட்டிக் கொண்டிருந்தவள், தலையை உயர்த்தாமலேயே அழைக்கிறாள்.

"உம்?"

அவன், பழைய சைக்கிள் ஒன்றை எடுத்து, சில்லறை ரிப்பேர்களைத் தானே சரிபார்த்துக் கொண்டிருக்கிறான்.

"இந்த வேலை போரடிக்கிறதா?"

"போரடிக்கிறதுன்னு ஒரு காதலன் — எந்த நேரத்திலேயும் காதலிகிட்டே சொல்லக் கூடாதுன்னு ஒரு பெரியவர் சொல்லியிருக்கார்..."

"யார் அந்தப் பெரியவர்?"

"வேறே யாரு... எங்க அப்பாதான்..."

"ஏன் நந்து... கேட்கிறேனேன்னு தப்பா நினைச்சுக்காதே... உங்க அப்பா மேல், உனக்கு ரொம்பவும் மரியாதையா இல்லே, பிரியமா?"

"மரியாதை கலந்த பிரியம்னு வச்சுக்கோயேன்..."

"உங்க அப்பா — தன் மூத்த பெண்டாட்டிக்கு எக்கச்சக்க துரோகம் பண்ணியிருக்கார் நந்தா..."

"மறுபடியும் மங்களாம்பாள் புராணமா?"

அவள், அவனை ஒரு குழந்தையைப் பார்ப்பது போலப் பார்க்கிறாள்.

"அசட்டு நந்து... எந்தக் கஷ்டமும் நமக்கு வந்தாத்தான் தெரியும். இப்ப, நாளைக்கே உங்க அப்பா, உன்னைக் கூப்பிட்டு, 'இவளை நீ கல்யாணம் பண்ணிக்கறதுல எனக்கு இஷ்ட மில்லே'ன்னு சொன்னா நீ என்ன பண்ணுவே?"

"வாட் நான்சென்ஸ் ஆர் யூ டாக்கிங்? அந்த மாதிரி எதிர்ப்பு தெரிவிக்கிறவர் உன்னே இங்கே அழைச்சிட்டு வரவே அனுமதிச்சிருக்க மாட்டாரு..."

இன்பாவின் மூங்கில் தோள்கள் குலுங்குவதிலிருந்து, அவள் சிரிக்கிறாள் என்பதை நந்து உணருகிறான்.

"என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கு...?"

"வேறே என்ன செய்யலாம் நந்தா... சில விஷயங்களுக்குச் சிரிக்கிறதா, அழறதான்னு தெரியல்லே. உங்க அப்பா என்னை வருங்கால மருமகளா நினைச்சுத்தான் வரவழைச்சார். உண்மை. ஒத்துக்கறேன். ஆனா, மருமகளா, வரப் போறவ, எப்பவோ காணாமல் போன மனைவியை ஞாபகப்படுத்தறதுனாலதான் அநாவசியமா பயப்படறார்..."

"நீயேதான் சொல்லிட்டியே... அநாவசிய பயம்னு... தன்னால பயம் தெளிஞ்சு போயிடும்..."

''மேலெழுந்த வாரியா நாம பார்க்கறப்ப, இது அநாவசிய பயமாத் தோணறது. அவரைப் பொறுத்த வரைக்கும் இந்தப் பயத்துக்கு அவசியம் இருக்கலாம் இல்லேயா...?''

நந்து, சைக்கிளின் துருப்பிடித்த கைப்பிடியை மண்ணெண்ணெயில் நனைத்த துணியால் துடைக்கிறான். எல்லாம் சரி, முன் பக்கச் சக்கரம் மட்டும் இவனைப் பார்த்து அழுகு காட்டுவது போலக் கொஞ்சம் வளைந்திருக்கிறது. அதைத் தட்டிவிட்டால் சைக்கிள் ரெடி.

இத்தனை சிங்காரமும், பரண் மீது கிடந்த சைக்கிளுக்கு எதற்கு?

அவினாஷுக்குச் சைக்கிள் ஓட்டக் கற்றுத் தர வேண்டுமாம்.

நேற்றிலிருந்து இன்பாவின் புதுப் பிடிவாதம் இது. நந்து எவ்வளவோ தடுத்துப் பார்த்துவிட்டான்.

''அவன் கால் சங்கிலியை அவிழ்த்து விட்டா நீ கார் சக்கரத்துல அகப்பட்ட ஆட்டுக்குட்டி மாதிரி ஆயிடுவே இன்பா.''

''அதையும்தான் பார்க்கிறேனே.....''

இன்பா, அவினாஷின் கால் விலங்கை இரண்டு நாட்களுக்கு முன்பு மெதுவாகக் கழற்றினாள்.

அவன், தனது சுமை குறைந்ததுகூடத் தெரியாமல், வெகு நேரம் சுவரோடு சாய்ந்திருந்தான்.

அவள்தான் அவனை எழுப்பி, நடக்க வைத்தாள். சங்கிலி கட்டியே இருந்ததால் சாய்ந்து போன நடையை அத்தனை சுலபத்தில் சரி செய்ய முடியவில்லை. அதற்கு இன்னும் நாளாகும். கணுக்காலில், விலங்கு மாட்டியிருந்த பகுதி மட்டும் கறுப்பாய், காய்ப்பேறிக் கிடந்தது. முழங்கால்களை நேராக நிமிர்த்த முடியவில்லை. நடை பயிலாத ஆதிவாசி போல, ஒரு மனிதக் குரங்கு எழுந்து நடப்பது போல, முதுகை வளைத்து, கைகளைத் 'தொள தொள'வெனத் தளர விட்டு நடக்கிறான்.

சகோதரனின் நடை, நந்துவின் மனசையே நோகடிப்பதாய்....

ஆனால் அவனது சங்கிலிகளை அவிழ்த்து விட்டதற்காக டாக்டர்தான் 'காச்மூச்' சென்று கத்தினார்.

''யாரைக் கேட்டுட்டு சங்கிலியை அவுத்தீங்க.... ஹூம்? அவன் பைத்தியத்திலேயும் கிரிமினல் மைண்டட் பைத்தியம். ஒரு நாள் இல்லேயின்னா ஒருநாள் அவுத்துவிட்டவங்க கழுத்து மேலேயே ஏறி உட்காருவான். அப்பத் தெரியும்....''

இத்தனை கத்தினாரே தவிர, இன்பாவின் கண்களை நேரில் சந்திக்க அவருக்குத் தைரியமில்லை.

டாக்டர் போனதும் லோகநாதன், நந்துவை அழைத்து எச்சரித்தார்.

''டேய், அவர் என்ன சொல்லிட்டுப் போனார்னு கேட்டேயில்லே.... நாளைக்கு ஏதாவது ஒண்ணு ஆச்சுன்னா, 'குய்யோ முறையோ'ன்னு கூப்பாடு போடக்கூடாது. ஆமா... சொல்லிட்டேன்....''

இவரும் இன்பாவைப் பார்க்காமல்தான் பேசினார் என்றாலும் இன்பா, இதைக் கொஞ்சமும் லட்சியம் பண்ணாமல், அவரிடம் பேசினாள்.

''மாமா....''

''?''

லோகநாதனின் நெஞ்சுக்குள் ஆட்டம் பாமின் நீண்ட திரி, மறுபடியும் மினுக்கி, திகிலூட்டியது...



'மாமா', 'மாமா'ன்னு கூப்பிட்டே என்னைக் கொன்னுடுவா போல இருக்கே.

'பேசாம, ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னது போல இவளை ஊருக்குக் கிளப்பி விட்டிருக்கலாமோ....'

முதல் நாள் மாலையில்தான் அவர், ஸ்டேஷன் மாஸ்டருடன் கலந்து பேசிவிட்டு வந்திருக்கிறார்...

அவர், அதுபற்றி யோசித்துக் கொண்டிருக்கும்போதே, இன்பா, இரண்டாவது முறையாக அழைக்கிறாள்.

''மாமா..... எப்படியும் அவரை, அறைக்குள்ளே வச்சு, பூட்டித்தான் வச்சிருக்கீங்க. அப்புறம் கால்லே சங்கிலி வேறே எதுக்கு?''

''..............''

''என்னைக் கேட்டா, சாயந்திர நேரத்துல, மாதையன் துணையோட, பங்களாவைச் சுத்தி இருக்கிற தோட்டத்துல உங்க மகனை நடக்க வச்சுப் பழக்கலாம். சைக்கிள்விடச் சொல்லித் தரலாம். கொஞ்ச நேரம்தான். அப்புறம் வழக்கப்படி பூட்டி வையுங்களேன். யார் வேண்டாங்கறாங்க...''

''..............''

''சின்னப் பையனா இருந்தப்ப உங்க மகன் சைக்கிள்லே காத்து மாதிரி பறப்பான்னு நந்துதான் சொன்னான்.''

''உனக்கு யாருடா சொன்னாங்க?''

லோகநாதன், நந்துவைப் பார்த்து அதட்டினார்.

''ஆ..... அது வந்து.... அது வந்து.... மாதையன்தான் சொல்லியிருக்கான்பா.''

''அவனுக்கு வேறே வேலையில்லே!''

நந்துவின் முழங்கையைத் தன் முழங்கையால் இடித்தபடி இன்பா சொன்னாள்.

''இங்கே எனக்கும்தான் வேலையில்லே. சும்மாவாவது வீட்டைச் சுத்திச் சுத்தி வர்றதுக்கு உருப்படியா, அவினாஷை ஒரு மனுஷனா மாத்திட்டுத்தான் போறேனே......''

லோகநாதனுக்கு வியர்த்து விட்டது...

'என்ன சொல்றா இவ.... வீட்டைச் சுத்திச் சுத்தி வர்றதை இவளே ஒத்துக்கறாளா. ஒத்துட்டுதானே ஆகணும். புதையலைப் பூதம் காக்குறாப்பல ன்னு சும்மாவா சொன்னாங்க. அவினாஷுக்குப் பைத்தியத்தைத் தெளிய வைச்சுட்டுப் போறாளாமா.... தெளியக் கூடிய பைத்தியமா அது? யார் கண்டது.... ஆவியாலேயும், பிசாசாலேயும் முடியாதது என்ன இருக்கு?'

அவர், அதற்கு மேலும் அங்கே நின்று பேசப் பயந்தவராய் நகர்ந்துவிட்டார்.

இந்தச் சம்பவத்தின் எதிரொலிதான் இன்றைய சைக்கிள் ரிப்பேர் வைபவம்.

நந்து, 'புதுசாய் ஒரு சைக்கிளை வாங்கி விடலாம்' என்று சொன்னான்.

இவள்தான் 'இதுவே போதும்' என்று கூறிவிட்டாள்.

நந்து காயலான் கடைக்காரன் மாதிரி, எல்லாவற்றையும் பரத்திப் போட்டுக் கொண்டு உட்கார்ந்துவிட்டான்....





"என்னங்க இது! ஓட்டப் பந்தயத்தில் ஒருத்தரை மட்டும் இருபதடி முன்னாலே நிக்க வைக்கிறாங்க....?"

"அவர் பின்தங்கிய வகுப்பினராம்."

— விஜய நிர்மலன்

"அம்மாடீ.... எல்லாம் முடிஞ்சது. காத்து அடிக்க வேண்டியது மாத்திரம்தான் பாக்கி. வீட்டுல காத்தடிக்கிற பம்ப் கிடையாது. மாதையனைக் கூப்பிடு..."

இன்பா எழுந்திருக்கிறாள். நந்து, இந்த வேலையிலேயே மிகவும் களைத்துப் போனவனாய்க் கையிலிருந்த அழுக்குத் துணியால், தரையை லேசாய்த் தட்டிவிட்டு, அப்படியே மல்லாந்து படுக்கிறான்.

"மாதா...."

"இந்தா.... இங்கேயிருந்தே கத்தாதே! அவன், தன் பெரிய எசமானிதான் கூப்பிடறாங்கன்னு, கையில் கற்பூரத் தட்டைத் தூக்கிட்டு வந்திடுவான்."

இன்பா 'களுக்'கெனச் சிரித்தபடியே வெளியே ஓடுகிறாள்.

"போற போக்குல, அந்த ஃபேன் சுவிட்சைத் தட்டிவிட்டுட்டுப்போயேன். குறைஞ்சா போயிடும்...."

"உம்... பெரிய வேலை வெட்டி முறிச்சுட்டே.... சுண்டைக்கா குழம்பு வைக்க, சித்தாள் எட்டுப் பேராம்...."

இன்பா, சுவிட்சைத் தட்டிவிட்டு மாடிக்குப் போகிறாள்.

'மாதா....'

— இப்படி அழைக்க வாய் திறந்தவள், நந்து சொன்னது நினைப்பு வர, உதட்டைக் கடித்தபடியே மாடியேற....

மாடிப் படிகளின் இரண்டாவது திருப்பத்திலேயே கிசுகிசுப்பான பெண் குரல் ஒன்று, இன்பாவின் கால்களைக் கட்டிப் போடுகிறது.

'யாரது.... சமையற்காரியா, வேலைக்காரியா?'

அவள் உற்றுக் கேட்க, மெல்லிய விசும்பலுடன் கூடிய அந்தக்குரல், மிகத்தெளிவாய்க் கேட்கிறது.

"என் ராஜா... கால் சங்கிலியை யாரு அவுத்தாங்க..."

"..............."

"இதப் பாரு.... இங்கேடா, இங்கே ஜன்னல் பக்கம் பாருடா, என் தங்கம், அம்மாவைத் தெரியில்லையாடா, உன் அம்மாடா!"

இன்பாவின் இதயம் துடிப்பதை மறந்து ஒருகணம் ஸ்தம்பித்துவிட்டது.

'யார் புவனாவா....'

'பேச்சே வராம, கட்டிலோட கிடக்கிற அந்த அம்மாவா....'

'எப்படி..... எப்படிப் பேச்சு வந்தது.... ஐய்யோ, இந்தச் சந்தோஷ சமாசாரத்தை உடனே ஓடிப் போய் நந்துகிட்டே சொல்லணும் போல இருக்கே.'

அவள் பூனை போல, அதே சமயத்தில் வேகமாய் அடியெடுத்து வைத்தவள், 'சட்'டென நிற்கிறாள். மண்டையோட்டுக்குள் மின்னல் வெட்டுவது போல ஒரு நினைப்பு...

'இப்பத்தான் பேச்சு வந்ததா.... இல்லே, இத்தனை நாளும் பேசாமலேயே இருந்திருக்காங்களா இந்த அம்மா....'

அவள் மாடியை அண்ணாந்து பார்க்கிறாள். மீண்டும், ரகசியமாய்ப் புவனாவின் குரல்...

"கண்ணா....இங்கேபாருடா. அம்மாவைப் பாரு. இனிமே எனக்கு நகையும் வேண்டாம். ஒண்ணும் வேண்டாம். கண்முன்னாலே, நான் பெத்த குழந்தை சித்ரவதை படறதைப் பார்த்துட்டும் ஊமையா வளைய வர்றேனே... என்னைக் கொன்னு போட்டுடேன்..."

"..............."

அவினாஷிடமிருந்து எந்தப் பதிலும் வராததால் இன்பாவுக்கு அவனது உண்மையான நிலை என்னவென்றே புரியவில்லை.

'அம்மா ஊமையாய் நடிப்பது போல இவனும் பைத்தியமாய் நடிக்கிறானா...'

ச்சே! அது எப்படிச் சாத்தியம்....?

கிட்டத்தட்ட பதினெட்டு வருஷங்கள்.... ஆமாம், மங்களாம்பாள் மறைந்து இருபது வருஷமாகிறதென்றால் அதற்கு இரண்டு வருஷங்களுக்குப் பிறகுதானே, ஜமீன்தாரின் இரண்டாவது மகன் கிணற்றில் விழுந்தான். பதினெட்டு வருஷங்களாகத் தாழிடப்பட்ட நான்கு சுவர்களுக்குள், காலில் கனத்த சங்கிலியும், பரட்டைத் தலையும், அரைகுறை உடையுமாய்.... ஒருவன் எப்படி நடிக்க முடியும்?

அவள், அதற்குமேல் அங்கு நிற்காமல் வேகமாகக் கீழிறங்கி வர.....

அவள் வந்த ஐந்தாவது நிமிஷமே மாதையன் மாடியிலிருந்து வருகிறான்....

"கூப்பிட்டீங்களாம்மா...."

"கூப்பிடணும்னு நினைச்சேன். அதுக்குள்ளே நீயே வந்துட்டே....."

"சொல்லுங்க தாயே!"

அவன் பணிவாகக், கைகட்டி, வாய் பொத்தி நிற்க, அவள் கீழ்க் கண்களால் அவனையே பார்க்கிறாள்.

இவனுக்கு இந்த விஷயம் எந்த அளவுக்குத் தெரியும்?

சந்தேகம், நெஞ்சைப் பிறாண்டுகிறது.

"சைக்கிளுக்குக் காத்தடிச்சிட்டு வரணும் மாது...."

"சரிங்க...."

"மாடியிலிருந்தா வர்றே?"

"ஆமாங்க...."

"அவினாஷ் என்ன பண்ணிட்டிருக்காப்பல..."

"தூங்கறாங்க...."

"ஓ.... அவங்க அம்மா...."

"அவங்களும் தூங்கறாங்க!"

இன்பா, 'விருட்'டெனத்தலையை உயர்த்தி, மாதையனின் கண்களையே உற்றுப் பார்க்க, அவனது சர்வாங்கமும் நடுங்குகிறது. இமைகளைத் தாழ்த்திக் கொள்கிறான்.

(தொடரும்)

# வாழைக்கு வந்த எய்ட்ஸ்



ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த 'லேடீஸ் ஃபிங்கர்'.

**ப**ழனி பஞ்சாமிர்தத்தின் தனி ருசிக்குக் காரணமே, சிறுமலை வாழைப்பழங்கள் தான்! அண்ணா மாவட்டத்திலுள்ள சிறுமலை, பன்றிமலை, பழனிமலை, கொடைக்கானல் மலைப் பகுதிகள் என்று பல இடங்களில் மலை வாழைப்பழங்கள் விளைந்தாலும் சிறுமலை வாழைப் பழம்தான் ரொம்பப் பிரசித்தம்.

ஆனால், இப்போது இந்த வாழையைப் பயிரிடுவதற்கே விவசாயிகள் பயப்படுகிறார்கள். காரணம், முடிக் கொத்து நோய். மனிதர்களுக்கு எய்ட்ஸ் மாதிரி வாழைகளுக்கு இந்த முடிக்கொத்து நோய். அத்தனை கொடூரமானது. இந்த நோய்க்கு ஆளான எந்த மரத்தையும் பிழைக்க வைக்க முடியாது. எத்தனை முயன்றும் இந்த நோய்க்கான மருந்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை!

இந்த நோயின் வரலாறு என்ன? இதிலிருந்து தப்பிக்கவே முடியாதா? தடியன் குடிசை என்ற மலைப் பகுதி (மூவாயிரம் அடி உயரம்!)யிலிருக்கும் தோட்டக் கலை ஆராய்ச்சி நிலையத்தின் தலைவரும் பேராசிரியருமான டாக்டர் ஆறுமுகத்தைச் சந்தித்துக் கேட்டோம்.

"இந்த முடிக் கொத்து நோயின் மூல ஸ்தானம் ஆப்பிரிக்கா. அங்கிருந்து கடந்த 52களில் இந்த நோய், கேரளா வழியாக இந்தியாவுக்குள் ஊடுருவி விட்டது. இந்நோயின் வைரஸ் கிருமிகள் காற்று மண்டலத்தில் இரண்டறக் கலந்து விட்டன. அவற்றை ஒழிக்கவே முடியாது. நாம் இனி அவற்றோடு போராடித்தான் ஆக வேண்டும்; வேறு வழியில்லை.

"இந்நோயால் பாதிக்கப்பட்ட வாழைகளைக் காப்பாற்ற முடியாது என்றாலும் நோய் வராமல் பாதுகாக்கலாம். அதாவது வாழைக் கன்றுகளை நடும் போதே அவை முடிக் கொத்து நோயால் பாதிக்கப்படாத வாழைகளிலிருந்து கொண்டு வரப்பட்ட கன்றுகள் தானா என்பதைச் சரிபார்த்துக் கொள்ள வேண்டும். நடுவதற்கு முன்பு 'ப்யூரடான்' என்ற கெமிக்கல் தெளித்து நடவேண்டும். நட்ட பிறகு, ஒவ்வொரு வாழை மரத்திற்கும் நாற்பத்தைந்து நாட்களுக்கு ஒருமுறை *'மானோப்ரட்டபாசம்' என்ற ஊசி மருந்தை



டாக்டர் ஆறுமுகம்.

நான்கு முறை செலுத்த வேண்டும். இப்படிப் பாதுகாக்கப்படும் வாழைகள் இந்நோயால் பாதிக்கப்படுவதில்லை. இந்த ஊசி மருந்துகளுக்காக ஒரு மரத்திற்கு ஆகும் செலவு சுமார் தொண்ணூறு பைசா மட்டும்தான். கேட்பவர்களுக்கு நாங்களே இம்மருந்தைச் செலுத்தி விடுவோம்.

"இது போன்ற மருந்துகள் ஏதும் இல்லாமலேயே முடிக்கொத்து நோயால் பாதிக்கப்படாத வெரைட்டி ஒன்றையும் கண்டுபிடித்திருக்கிறோம். இது ஆஸ்திரேலியாவிலிருந்து கொண்டு வரப்பட்ட வெரைட்டி. ஆஸ்திரேலியாவிலிருந்து வாழை மரத்தின் சிறு தண்டுப் பகுதி ஒன்றைக் கொண்டு வந்து 'டெஸ்ட் டியூப்'பில் போட்டு வளர்த்து உருவாக்கினோம்! ஆம்; டெஸ்ட் டியூப் பேபி மாதிரியேதான் இது!" என்று விளக்கிய டாக்டர் ஆறுமுகம் எங்களை அழைத்துச் சென்று அந்த 'டெஸ்ட் டியூப் பேபி'களைக் காண்பித்தார். மொத்தம் மூன்று பேபி வாழைகள் 'லேடீஸ் ஃபிங்கர்' (இனி வெண்டைக்காயை எப்படி அழைப்பதாம்!) என்ற பெயரில் தளதளவென்றிருந்தன.

"இவை பல்கிப் பெருகிவிட்டால், முடிக் கொத்து நோயைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை!" என்றார் ஆறுமுகம்.

---

* நாக்கைப் புரட்டுகிற பெயராக இருக்கிறது. சரியான உச்சரிப்பு மற்றும் விவரங்களை அறிய விரும்புவோருக்கு விலாசம்: பேராசிரியர் டாக்டர் ஆறுமுகம், தோட்டக்கலை ஆராய்ச்சி நிலையம், தடியன் குடிசை, அண்ணா மாவட்டம்.

* அடுக்கடுக்காய்க் கிடுக்கிப் பிடி போட்டுத் தமிழக முதல்வரைத் திணறடித்தது தங்களின் தலையங்கம்!

அபிராமம், கு.மு. பாப்ஜி.

* 'கள்ளக் கடத்தலுக்கு பம்பாய் மையம் ஆனது பற்றிய கட்டுரை ஒரு துப்பறியும் கதையைப் போல 'விறுவிறு'. எப்படி சார் இத்தனை விவரங்களைச் சேகரித்தீர்கள்?

ஈரோடு—2, அருண்.

* பம்பாயில் கடத்தல் நடைபெறுவதை இப்படியா பாடம் நடத்தற மாதிரி புட்டுப் புட்டு வைக்கிறது? 'தொழில்' தெரியாதவங்களுக்குக் கற்றுக் கொடுக்கறீங்களே!

வடுவூர், எஸ். கண்ணன்.

* ஒருசாண் வயிற்றை வளர்க்க ஏழை மக்கள் என்ன பாடுபடுகிறார்கள் என்பதற்கு ஓர் உதாரணம் குடி பெயர்ந்து சென்ற தமிழ் மக்கள்தான். இவற்றையெல்லாம் நினைத்தால் நெஞ்சு வெதும்பத்தான் செய்கிறது.

கொ. இரமேஷ்
காரிமங்கலம்.

* பத்திரிகைத் துறையில் இவ்வளவு பிரபலமாயிருக்கும் பம்பாய்த் தமிழர்களை எண்ணி உளம் பூரித்துப் பெருமை அடைந்தேன்!

தக்கலை, லீலா ராம்.

* மசமசவென மழை!வெளியே எங்கும் தலைகாட்ட முடியாதே; என்ன செய்யலாம் என யோசித்த வேளையில் இவ்வாரக் கல்கி கைக்கு வந்தது. பம்பாய்த் தமிழர் சிறப்பிதழ் 1 முழுவதையும் ரசித்துப் படித்தேன். மழைக்குச் சுடச்சுட 'பாம்பே டீ' குடித்த குஷி ஏற்பட்டது!

திருமதி நாராயண ராவ்,
சென்னை—39.

* கங்கையின் கோதுமையும், காவிரி வெற்றிலையும் — என்ற தலைப்பில் காதல் திருமணங்கள் பற்றிய அபர்ணாவின் கட்டுரை ரியலி சூப்பர்ப்!

சென்னை—4. மயிலை கோபி.

* தமிழகத்தில் இருந்து பம்பாய் சென்றால் வேலை செய்யும் வாய்ப்பு நிச்சயம் கிடைக்கும் என்பதை விளக்கிய அந்தக் கடைசிப் பக்கப் 'படக் கதை' முதல் தரமானது!

எஸ். சம்பத்குமார்
சாலிக்கிராமம்

* 'வேலை கிடைக்க வழி'' போன்ற துணுக்கு சமாசாரத்தையெல்லாம் படக்கதை போல ஒரு பக்கத்தில் தந்து, எங்கள் பொறுமையைச் சோதிக்கிறீர்களே!

பழனி, ஆர்.ஜி. சிவக்குமார்.

* நெருக்கடியான சூழ்நிலையில், பரபரப்பான தங்கள் வாழ்க்கையைச் சுறுசுறுப்போடு அமைத்துக் கொண்டு, உலகத்தவரே வியக்கும் வண்ணம் வாழ்ந்து வரும் தாராவி தமிழர்களை அப்படியே படம் பிடித்து, கண்முன் கொண்டுவந்து நிறுத்தி விட்டீர்களே!

பண்ருட்டி, எஸ். தமீஜுதீன்.

* முதல் பரிசு பெற்ற சிறுகதையான 'சிபிகள்' அருமை! அதற்கு ம.செ. வரைந்திருந்த படம் மிகப் பொருத்தம்!

மா. அய்யப்பன்,
நாட்டரசன்கோட்டை.

* கிராம மக்களுக்கு வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்து அவர்களுக்கு உதவுவதே தலையாய பணி என்று கூறும் புதிய த.செயலாளர் மிகவும் வித்தியாசமானவர்!

எஸ்.வி. ராஜசேகர்,
சென்னை—17.

* ஒரே சமயத்தில் சுஜாதா, பட்டுக்கோட்டை பிரபாகர் ஆகியோரின் தொடர்கதைகளைத் துவக்கி, எங்களை மகிழ்ச்சியில் திக்குமுக்காடச் செய்துவிட்டீர்களே!

எஸ்.ஏ. கோவிந்தகுமார்,
நீடாமங்கலம்.

## கிடுக்கிப்பிடி போட்ட தலையங்கம்!

* கேள்வி — பதில் பகுதியில் வாஜ்பாய் — எம். ஜி. ஆர். இருவரையும் ஒன்றுபடுத்தி தராசு எழுதியுள்ளதைப் படித்து வியப்பும் வேதனையும் அடைந்தேன். பஞ்சாபில் மத்திய அரசும் மாநில அரசும் சட்டம் ஒழுங்கைச் சரிவரக் கண்காணிக்க முடியாத நிலை. ஒருவேளை இன்று பஞ்சாபில் மக்களுக்கு ஏற்பட்டுள்ள பாதுகாப்பற்ற நிலையின் தீவிரத் தன்மையை நீங்கள் உணரவில்லையோ என நினைக்கிறேன்.

சென்னை — 82, கே. சங்கர்,
பொதுச் செயலாளர்,
பாரதிய ஜனதா கட்சி.

(பஞ்சாப் நிலவரத்துக்கும் தமிழ்நாட்டின் இன்றைய சூழ்நிலைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருக்கிறது என்பதை உணர்ந்தே இருக்கிறோம். ஆனால் அதே சமயத்தில் எம். ஜி. ஆர். கட்சித் தொண்டர்களைப் பார்த்துத் 'தற்காப்புக்காகக் கத்தி வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறியதற்கும் வாஜ்பாய், 'லைசென்ஸுகளுடன் பஞ்சாப் மக்களுக்குத் தற்காப்புக்காக அரசே துப்பாக்கிகள் வழங்க வேண்டும்' என்று கூறியதற்கும் அதிக வித்தியாசம் இல்லை என்றே கருதுகிறோம்.

மக்கள் பாதுகாப்பற்ற நிலையில் இருந்தால் அவர்களைப் பாதுகாக்க அரசுதான் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமே தவிர, மக்களே தங்களைக் காத்துக் கொள்ளட்டும் என்று ஆயுதங்களை விநியோகிப்பது நாகரிக அரசியல் ஆகாது. அராஜகம் மேலும் வளரவே அது வழி வகுக்கும்.

மத்திய அரசு பஞ்சாப் மக்களுக்குப் பாதுகாப்பளிக்கும் விதமாகப் பயங்கரவாதிகளின் ஊடுருவலைத் தடுக்க பாகிஸ்தான் எல்லைப்புறங்களில் ராணுவத்தை நிறுத்த வேண்டும் என்று வாஜ்பாய் கோரியதைக் கல்கி ஆதரித்துத் தலையங்கம் எழுதியதை நினைவூட்ட விரும்புகிறோம். வாஜ்பாயிடமிருந்து அதுபோன்ற ஆக்கபூர்வமான யோசனைகளை மேலும் எதிர்பார்க்கிறோம். — ஆசிரியர்.)

# இடைத் தேர்தல் முடிவு எப்படி இருக்கும்?



* 'ஜம் ஜம்'



* கன்யூட் கட்டளை



* நகைச்சுவையில் நாட்டம்

* க. இளங்கோ, நந்தியநல்லூர்.

? மதுரை கே. கே. நகரின் பெயர் மாற்றப் பட்டிருப்பது குறித்து?

! எம். ஜி. ஆர். ஆட்சியின் சிறுபிள்ளைத் தனங்களில் இதுவும் ஒன்று.

* கே. பட்டாபிராமன், குடியாத்தம்.

? விசாரணைக் கமிஷன் அறிக்கைகளை பார்லிமெண்டில் சமர்ப்பிக்கத் தேவையில் லாத வகையில் புதிய மசோதா நிறைவேற்றப் பட்டிருக்கிறதே?

! எதேச்சாதிகாரம் தலைதூக்க ஆரம்பித் திருக்கிறது.

* கே. என். சினிவாஸ், கொரட்டூர்.

? 'டமுக்கு டப்பா டம்... ஜமுக்கு ஜப்பா ஜம்...' எப்படி?

! கடலோரத்துக் கவிதை ரஞ்ஜனிதானே! தான்!

* சி. சுப்பு, தேரெழுந்தூர்

? முசிறிப்புத்தன் விவகாரம் எப்படி?

! முசிறிப்புத்தனின் பதவி பறிக்கப்பட்ட தால் இந்தத் தேசத்திற்கு எந்தவிதமான நஷ்ட மும் ஏற்பட்டுவிடவில்லை. ஆனாலும் அமைப்பு ரீதியாக எம். ஜி. ஆர். மன்றத்தைக் கட்டிக் காத்தது முசிறிப்புத்தன் தான். அந்த வகையில் பார்க்கும் போது எம். ஜி. ஆர். செய்தது நன்றி மறந்த செயல்தான்.

* சாஸ்திரி வெங்கடேஷ், நெல்லை.

? சிவசங்கரி ஆரம்பித்திருக்கும் 'அக்னி' பற்றி?

! ஹிந்திக்கு வால் பிடிக்காமலிருந்தால் சரி.

* த. ஜெயக்குமார், கொப்பம்பட்டி.

? தி. மு. க. ஆட்சிக்கு வந்தாலும் கல்கி இதே போன்று செயல்படுமா?

! யார் செய்தாலும் குற்றம் குற்றமேதான். சந்தேகமே வேண்டாம்.

* எம். ஜானகி, தேரெழுந்தூர்

? 'புதுக் கவிதை எழுதாதே!' என்று புதுக் கவிஞர்களுக்குக் கட்டளையிட்டுள்ளாரே மேத்தா; இது சரியா?

! நல்ல கவிதைகள் எது என்பதைக் காலம் தீர்மானிக்கும். யாரையும் எழுதாதே என்று கட்டளை என்ன, கேட்டுக் கொள்ளக் கூட யாருக்கும் உரிமை இல்லை. 'கன்யூட்'டின் சர்வாதிகாரக் கட்டளைகளுக்கெல்லாம் கட லலைகள் கட்டுண்டு போகா.

* ஆர். மாறவர்மன், பெரியகுளம்.

? பம்பாய் கார்ப்பரேஷன் மீது ஏறி நின் றால் வேலை கிடைக்கும்! நமது கார்ப்பரேஷன் மீது ஏறி நின்றால்...?

! பக்கத்தில்தான் இருக்கிறது சென்ட்ரல் ஜெயில்.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'எம்.ஜி. ஆரின் கத்திப் பேச்சை, என் டி.



* என்ன...



...மோதல்?

ஆரும், ஹெக்டேயும் பேசியிருந்தால் ராஜீவ் மௌனம் சாதிப்பாரா?' என்ற நம்பூதிரிபாடின் கேள்வி குறித்துத் தங்கள் கருத்து என்ன?

! நம்பூதிரிபாட் வளர நன்னய் ஸம்ஸாரிச்சு!

* உமார்த்தி, கோவை.

? பஸ் பயணம், படகுப் பயணம் — ஒப்பிடுங்களேன்?

! படகில் ஃபுட்போர்ட் டிராவல் அளவுக்கு ஓவர் லோடு ஏற்ற முடியாது. கண்டக்டர் என்னதான் கரடியாகக் கத்தினாலும் திருவல்லிக்கேணி எருமைமாடு மாதிரி நகராமல் நின்று கொண்டிருக்க முடியாது. பெண்களை வேண்டுமென்றே உரச முடியாது.

* ஜே. பாலசந்திரன், நீடாமங்கலம்.

? எம். ஜி. ஆர். இப்போது எதை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறார்?

! கிண்டிக்கு வரப் போகும் ஒரு புதிய மனிதரை!

* ஜி. ராஜசேகர், வனையமாபுரம்.

? மக்களின் பிரச்னைகளை நேரடியாகக் கவனிப்பதால்தான் மொத்தம் இருபத்தைந்து அமைச்சர்கள் தேவைப்படுகிறார்கள் என்று ஆர். எம். வீ. பேசியிருக்கிறாரே?

! அங்கத பாணியில் நகைச்சுவையாகப்



* ஒன் ஜாஸ்மனால் பேசுக

நீங்கள் கேட்டவை — தராசு

பேசுவதென்பது சுலபமான காரியமல்ல; இப்போது இந்தக் கிண்டலை வைத்துப் பார்க்கும்போது ஆர். எம். வீ.க்கு அந்தக் கலையில் நாட்டம் பிறந்திருப்பதாகத் தோன்றுகிறது.

* இரா. சரவணன், கருந்தட்டான்குடி.

? ஒழுக்கம் வளர 'எய்ட்ஸ்' உதவுகிறது என விஞ்ஞானிகளெல்லாம் கூறி வருவதைக் கவனித்தீரா?

! பயத்தின் மூலம் வளருகிற ஒழுக்கம் உயர்வானது அல்ல என்பதுடன் தற்காலிகமானதே. மனித இயல்பாகவே ஆகிவிட்ட ஒழுக்கம்தான் போற்றுதற்குரியது.

* ஆர். நாகராஜன், செம்பனார் கோவில்.

? நெல்லை, அருப்புக் கோட்டை — இடைத் தேர்தல் முடிவை முன் கூட்டியே சொல்லுங்கள் பார்ப்போம்?

! ஆர். எம். வீ. தோற்றுவிட்டால் ஜெயலலிதா கை ஓங்கிவிடும் என்பதால், அவர் தோல்வியைத் தி. மு. க. வினரே விரும்ப மாட்டார்கள் என்று கருத இடமிருக்கிறது. அதனால் இந்த இடைத் தேர்தல் முடிவு ஆளுக்கு ஒன்றாக இருக்கும் என்றே கருதுகிறேன்.

* மா. அய்யப்பன், நாட்டரசன்கோட்டை.

? ராணி எலிசபெத் — திருமதி தாட்சர் இருவருக்கிடையிலும் என்ன மோதல்?

! எல்லாம் தென் ஆப்பிரிக்கா விஷயமாகத்தான். நிற வேற்றுமை காட்டிக் கறுப்பர்களை ஒடுக்கும் தென் ஆப்பிரிக்க அரசை வழிக்குக் கொண்டு வர, அந்நாட்டைப் பொருளாதார ரீதியில் புறக்கணிக்க வேண்டும்என்று இந்தியா உள்படப்பெரும்பாலான காமன்வெல்த் நாடுகள் கருத, தாட்சர் அதற்குச் சம்மதிக்க மறுக்கிறார். இதனால் காமன்வெல்த் அமைப்பே உடைந்துவிடுமோ என்று அரசிக்குக் கவலை. பிரதமரை அரண்மனைக்கு அழைத்து அறிவுரை வழங்கினார். ஆயினும் தாட்சர் பிடிவாதம் தளரவில்லை.

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

தே. பட்டாபிராமன்,
49, தொச அண்ணாமலை தெரு,
குடியாத்தம் — 632 602.

# அணையைக் கட்டினார்கள்; அடி வயிற்றில் அடித்தார்கள்!

**ஆ**ற்றின் குறுக்கே அணை கட்டுவதன் நோக்கம், மழைத் தண்ணீரைச் சேமித்து வைத்து, முறையாகப் பயிர்களுக்குப் பலன் அளிக்கும்படி பாசன வசதி செய்வதுதான். இவ்வாறு தண்ணீரைத் தேக்கி விடும் போது, ஏற்கெனவே இருந்த ஆயக்கட்டுகள் தவிர, புது ஆயக் கட்டுகளும் உருவாக்கப்படும். ஆனால், சில சமயங்களில், கட்டப்படும் அணையினால் புது ஆயக் கட்டுகள் மட்டும் பயன் பெற்றுக் கொண்டு, பெரும்பாலான பழைய ஆயக்கட்டுகளின் நிலை 'அம்போ' ஆகி விடுவதும் உண்டு. இதனால் 'குய்யோ, முறையோ' என்று அலறியடித்துக் கொண்டு ஓடும் பாதிக்கப்பட்ட விவசாயிகள், பொறுப்பிலுள்ள அணை எஞ்ஜினியருக்கு 'வைக்க' வேண்டியதை வைத்து விட்டுக் கொஞ்சம் பயனடைவதுண்டு.



* சொட்டு நீர்ப் பாசனம் செய்தும் பயனின்றி உயிரை விடும் தென்னைகள்....



* மருதா நதி அணை

**கொ**டைக்கானல் மலையில் பண்ணைக் காட்டுக்கும் தாண்டிக்குடிக்கும் இடையில் உருவாகும் மருதா நதி, அய்யம் பாளையம் — கோம்பையில் கீழிறங்கி, பட்டிவீரன்பட்டி, வாடிப்பட்டி வழியாகச் சுமார் இருபது கி. மீ. ஓடிச் சென்று வத்தலகுண்டுவிற்கு அருகில் மஞ்சள் ஆற்றோடு கலந்து விடுகிறது. அந்த மருதா நதியிலிருந்து பிரிந்து போகும் ஓடைதான் வஞ்சி ஓடை. மருதா நதியின் குறுக்கே அணை கட்டிய பின் இது வஞ்சிக்கப்பட்ட ஓடையாகி விட்டது. அணை கட்டுவதற்கு முன், ஐந்து கண்மாய்களையும் நிரப்பிவிட்டு, வஞ்சிஓடையிலும்ஓடிச்சுற்றுப்புறங்களிலுள்ள கிணறுகளிலும் தண்ணீர் மட்டத்தை உயர்த்தி, விவசாயிகளை மகிழ்ச்சியுறச் செய்த மருதா நதி, இன்று அதனால் ஏற்கெனவே பயன் பெற்றோரில் முப்பது சத வீத மக்களுக்கு மட்டுமே (அதிலும் புது ஆயக்கட்டுகள் பாதி) பயன் தந்து கொண்டு வருகிறது. இதற்குக் காரணம் அணை கட்டியதுதான் என்று சொல்கிறார் பாதிக்கப்பட்ட விவசாயிகளின் சார்பில் எங்களை அழைத்துச் சென்று காட்டிய தில்லை கோவிந்தன்.

மருதா நதி மூலம் தண்ணீர் பெற வேண்டிய கண்மாய்கள் தாமரைக்குளம், கருங்குளம், ரெங்க சமுத்திரம், சொட்டாங்குளம், கோம்பைப்பட்டி (கண்மாய்). ஆனால் அணை கட்டிய பிறகு பயன் பெறுவது வஞ்சி ஓடையின் முதலில் உள்ள தாமரைக்குளம், கருங்குளம், ரெங்க சமுத்திரம் கண்மாய்கள் தான். அதற்கப்புறம் உள்ள கண்மாய்களான



* விளை நிலங்களெல்லாம் மேய்ச்சல் நிலங்களான அவலம்!

சொட்டாங்குளத்துக்கும், பின்னர் கோம்பைப்பட்டி கண்மாய்க்கும் தண்ணீர் வரத்து கிடையாது.

"அணையில் தண்ணீர் தேங்கத் தேங்க அவ்வப்போது திறந்து விட்டுக் கொண்டிருந்தார்கள் என்றால் பரவாயில்லை. தேக்கி வைத்துக் கொண்டு, கடைசியில் எந்தவித முன்னறிவிப்பும் இன்றித் திடீரென்று திறந்து விடுவதால் தண்ணீர் எந்தக் கண்மாய்க்கும் போகாமல், நேராகச் சென்று மஞ்சளாற்றில் கலந்து விடுகிறது. பின்பு ஷட்டர் போட்டுக் கண்மாய்களுக்குத் தண்ணீரைத் திருப்பி விடும்போது அணையில் நீர் மட்டம் குறைந்துவிடும். இந்த அணையினால் பெரும்பாலான விவசாயிகளுக்கு நஷ்டம்தான்!" என்கிறார் தில்லை கோவிந்தன்.



* உயிரை விட்டுக் கொண்டிருக்கும் தென்னந் தோப்புகள்

கடைசியில் உள்ள கண்மாயிலிருந்து ஒவ்வொன்றாகப் பின்னோக்கி நிரப்பிக் கொண்டு வர வேண்டும். ஆனால் மருதா நதியில் விஷயமே தலைகீழாக நடக்கிறது. இதனால் சொட்டாங்குளம் கண்மாய்க்கு நீர் வரத்து அறவே இல்லாமல் போய்விட்டது.

"அணை கட்டப்படுவதற்கு முன்பு குடி மராமத்தாக இருந்த போது, எல்லாக் கண்மாய்களும் நிரம்பி, வஞ்சி ஓடையிலும் மறுகால் ஓடும். ஆனால் அணை கட்டிய பிறகு, அந்த நிலை இல்லை. எங்கள் சொட்டாங்குளம் கண்மாய்க்குக் காமராஜர் சாகரில் (அதாவது திண்டுக்கல்லுக்குக் குடிநீர் சப்ளை செய்யும் காமராஜர் சாகர்தான்) இருந்து கூடச் சில சமயங்களில் தண்ணீர் வருவது உண்டு. இன்றோ காமராஜர் சாகர், மருதா நதி இரண்டிலிருந்தும் எங்கள் சொட்டாங்குளம் கண்மாய்க்குத் தண்ணீர் வரத்து கிடையாது. நீங்களே வந்து எங்கள் நிலங்களைப் பாருங்கள்!" என்று அழைத்துக் கொண்டு போனார் தில்லை கோவிந்தன்.



* தில்லை கோவிந்தன்

பெரிய கண்மாயான சொட்டாங்குளத்தில் ஒரு மூலையில் குட்டையாகத் தண்ணீர் இருந்தது. வஞ்சி ஓடை, தண்ணீரைப் பார்த்தே நெடுநாட்களாகியிருக்கும் என்று தெரிந்தது. ஓடையின் இருபுறத்திலும் உள்ள கிணறுகளைக் குனிந்து பார்த்தால், தலை சுற்றுகிற அளவுக்கு ஆழம்; தண்ணீரைத்தான் காணவில்லை. கண்மாயையும், ஓடையையும் ஒட்டிப் போடப்பட்டிருக்கும் தென்னை மரங்கள், தண்ணீர் இல்லாமல் காய்ந்து, தென்னை மட்டைகள் உதிர்ந்து மொட்டை மரங்களாக நின்று கொண்டிருந்தன.

"காலம் காலமாக வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிய மருதா நதியிலும், வஞ்சி ஓடையிலும் தண்ணீர் வரத்துச் சரியில்லாததால் ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் பாழாகிவிட்டன. அதனால் நாங்கள் ஆழ்கிணறு போட்டு, ஆயிரக்கணக்கில் செலவு செய்து சொட்டுத் தண்ணீர் முறையில் (**Drip Irrigation**) பயிர் செய்கிறோம். அப்படியும் தண்ணீர் போதாததால் தென்னை மரங்கள் உயிரை விட்டுக் கொண்டிருக்கின்றன. மருதா நதியிலும், வஞ்சி ஓடையிலும் தண்ணீர் விடாததால் நாங்கள் கஷ்டப்படுவது ஒருபுறம் இருக்க, பாசன வசதி பெறும் சில நூறு ஏக்கர்களையும் பாருங்கள். சரியான நேரத்திற்குத் தண்ணீர் விட்டால் ஆவணி, புரட்டாசி மாதங்களில் நடவுகளை முடித்து விடுவார்கள். ஆனால் இந்த இஞ்ஜினியர்கள், அணையில் தண்ணீரைச் சேமிப்பதாகச் சொல்லிக் கொண்டு, கடைசியில் திறந்துவிடுவதால் ஆவணி, புரட்டாசியில் விவசாயம் செய்ய முடியாமல், கார்த்திகை, மார்கழி மாதங்களில்தான் விவசாயம் செய்ய முடிகிறது. இதனால் பயிர்களுக்குப் பூச்சித் தொந்தரவு. நெல்லுக்கு, பின் மழை தேவை. பல சமயங்களில் பின்-மழை இருக்காது. ஆக இந்த அணை கட்டியதால் எவ்வளவு தொந்தரவு பாருங்கள்!" என்றார்கள் பலரும்.

— ப்ரியன்

வாழ்க்கை வாழ்வதற்கே!




# குறைவற்ற செல்வம்!

'சேமிப்பாவது ஒன்றாவது. துண்டுவிழாமல் குடும்ப பட்ஜெட் போட முடிந்தாலே போதாதா?'' என்று கேட்கிறார் சேலம் அனந்தசாமி. ''வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டி விட்டோம்; இருபதோ முப்பதோ உபரியாகக் கூட இருக்கிறது என்று சந்தோஷப்படும் நேரத்தில் உடம்புக்கு ஏதாவது வந்து விடுகிறது. உடனே டாக்டர் பில், ரத்தப் பரிசோதனை, எக்ஸ்ரே, மருந்து பில்கள் என்று ஏகமாகச் செலவாகிக் கடைசியில் கடனில் வந்து முடிகிறது!''

உண்மைதான். நோயற்ற வாழ்க்கை அளிப்பது போன்ற மனநிம்மதியும் மகிழ்ச்சியும் வேறு எதிலும் கிடைக்காது. அதுதான் குறைவற்ற செல்வம் என்ற பழமொழி சத்தியமானது. ஆனால் ஆரோக்கியமான வாழ்க்கைக்கு வேண்டிய முயற்சிகளை நாம் மேற்கொள்கிறோமா?

எனக்குத் தெரிந்த, உங்களுக்கும் தெரிந்த ஒரு பத்திரிகை ஆசிரியர், ''நாற்பது ஆண்டுகளாக யோகாசனம் பயின்று வருகிறேன். டாக்டரிடம் போகவே நேர்ந்ததில்லை'' என்கிறார். ''தொழிலில் இருக்கக் கூடிய டென்ஷனைத் தாங்கிக் கொள்ளவும் அது உதவுகிறது.''

முதலில் கொஞ்சம் சிரமமாகத்தான் இருக்கும். ஆனால் யோகாசனம் பழகிவிட்டால் மிக எளிதாகச் செய்யலாம். கூடவே தோத்திரங்கள் கூறி உடலுடன் மனத்தையும் ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளலாம். உடலை வளைத்து யோகாசனம் பண்ணப் பிடிக்காதவர்கள் தினம் காலையில் நடை பயிலலாம். யோகாசனம் போலவே வாக்கிங்குக்கும் தினம் அரை மணிநேரம் செலவிட்டால் போதும்; வேறு பணச் செலவு கிடையாது! ''வேகமாக நடப்பதற்கு ஈடான உடற்பயிற்சி வேறு எதுவுமே இல்லை'' என்று சர்வதேச டாக்டர்களும் சத்தியம் பண்ணுகிறார்கள் என்பதோடு இதற்கு ஆசானைத் தேடிப் போக வேண்டிய' அவசியமும் இல்லை. ஆனால் இதைக் கூட நம்மில் பலர் செய்வதில்லையே! ஆரோக்கியம் எப்படி இருக்கும்?

மலேரியா மட்டுமின்றி ஃப்ளூ போன்ற பல வியாதிகள் பரவக் கொசு காரணமாகிறது. கொசு வலை நல்ல வருவாய் தரத்தக்க முதலீடு. டாக்டருக்கு அழாமல் இருந்தால் அதுவே சேமிப்பாக மாறி வருவாய்க்கும் வழி வகுக்குமல்லவா?

ஒவ்வொரு முறை சாப்பிட்ட பிறகும் பற்களை பிரஷ்ஷால் சுத்தம் செய்வது மிக நல்ல பழக்கம். வாய் சுத்தமாக இல்லை எனில் நமது மூச்சே நாற்றமடிப்பது மட்டுமல்ல டயபெடஸ் (நீரிழிவு) போன்ற பல வியாதிகளுக்கு அதுவே காரணமாகிறது.

மின்சார சம்சாரம் விசு போல் நாமும் தான் நாக்கைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் தவிக்கிறோம். கடைசியில் ஊளைச் சதை; அதன் உடன் விளைவான பலவித உடல் கோளாறுகள் என்று வரும்போது ஷாக் ஆகத்தான் இருக்கும்.

ராஜாஜி, நண்பர் திவாகர் வீட்டில் தங்கிய போது திவாகர் கேட்டார்: ''ராஜாஜி! நீங்கள் வயதானவராயிற்றே, சாப்பாட்டில் ஏதாவது கட்டுப்பாடு உண்டா? சேர்க்க வேண்டியது, தள்ள வேண்டியது ஏதும் இருக்கிறதா?''

''எதுவும் விலக்கல்ல'' என்றார் ராஜாஜி. ''பாதாம் அல்வா கொடுத்தால் கூடச் சாப்பிடுவேன். ஆனால் அரை ஸ்பூன்தான். 'இன்னும் துளி சாப்பிடுங்கள்' என்று யாரும் வற்புறுத்தக் கூடாது!''

ஒரே ஒரு இட்டிலியை நாலாகப் பகுத்து, ஒவ்வொரு துண்டத்துக்கும் கொஞ்சம் சாம்பார், துளி சட்னி, சிறிதளவு தயிர், வாசனைக்கு மிளகாய்ப் பொடி — என்ணெய் என்று நாலு விதமாகத் தொட்டுக் கொண்டு ருசித்துச் சாப்பிடுவார் ராஜாஜி. ஆனால் அந்த ஓர் இட்டிலியோடு அவரால் நிறுத்திக் கொள்ள முடிந்ததே; அந்த மன உறுதிதான் அவரது நீண்ட ஆயுளுக்கும் ஆரோக்கியத்துக்கும் காரணமாயிருந்தது.

— ஜீவன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani.
Editor: K. Rajendran.

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka



